# ஆத்மபோதம்

## (ATMABHODHAM)



டாக்டர் பி. கே. சுந்தரம்,
எம்.ஏ, பிஎச்டி.

ஸ்ரீ சங்கரர் அருளிய

# ஆத்ம போதம்

ஆசிரியர்
டாக்டர் P. K. சுந்தரம் M.A., Ph. D.,
தத்துவத்துறை துணைப்பேராசிரியர்
சென்னை பல்கலைக்கழகம்

வெளியீட்டாளர்
பகவான் ஸ்ரீ சத்யசாயி சேவா நிறுவனம்
தமிழ் நாடு

# முன்னுரை

ஸ்ரீசங்கரர் நிறுவிய அத்வைதம் மூன்று அடிப்படைச் சான்றுகளின் பேரில் எழுந்ததாகும். அவை (1) வேதம் (2) பகுத்தறிவு (3) மெய்யுணர்வு.

பரம்பொருள் குணங் குறிகளற்ற, வேற்றுமைகளெல்லாம் ஒருங்கே நீங்கின தத்துவம் என்றும், உலகம் மாயையான தோற்றம் என்றும், மெய்யறிவினால்தான் அதைப் போக்கிக் கொள்ள முடியும் என்றும் உயிரும் பரம்பொருளும் ஒன்றே என்றும் அத்வைதம் சொல்வது வேதத்தைச் சான்றாகக் கொண்டுதான்.

"இரண்டற்ற ஒன்றேயான உண்மைப் பொருளாகத் தான் இவையெல்லாம் முதலில் இருந்தது" என்று சாந்தோக்கிய உபநிஷத் கூறுகின்றது.

"எங்கு மற்றொன்றைப் பார்க்க வில்லையோ அது பரம்பொருள்" என்றும் அது கூறுகின்றது. "எல்லாம் ஒன்றாகி விட்டபிறகு, எதைக் கொண்டு எதைக்காண்பான்?" என்று பிருஹதாரண்யக உபநிஷத்தும் கேட்கின்றது.

நமக்குத் தெரியாததைச் சொல்லத்தான் வேதம் இருக்கிறது. கண்ணால் பார்த்து, காதால் கேட்டுத் தெரிந்து கொள்ளக் கூடிய விஷயங்களில் வேதம் தேவையில்லை என்று பகவத்கீதைக்கு (XVIII, 66) உரை செய்யும்பொழுது சங்கரர் சொல்லுகின்றார். அத்தகைய வேதங்களும் மெய்ப்பொருள் ஒன்று என்று வற்புறுத்துகின்றன. அந்த மெய்ப்பொருள் ஸத்-சித்-ஆனந்தம் (தைத்திரீயம் II. 1) என்றும், கேவல நிர்க்குண வஸ்து என்றும் ச்வேதாச்வதர உபநிஷத் (VI-11) என்றும் கூறுகின்றன. மேலும், மண்ணால் செய்

யப்பட்ட எல்லாம் மண்ணைத் தவிர வேறல்ல; அவை வெறும் பெயர்கள் மட்டுமே என்பதைச் சுட்டிக்காட்டி. உலகம் முழுதுமே இவ்வாறு பெயர் மட்டுமே; அதில் உண்மையாக இருப்பது மெய்ப் பொருள் ஒன்றுதான் என்று சாந்தோக்கிய உபநிஷத் கோடிட்டுக் காட்டுகிறது.

"உள்ள பொருள் ஒன்று; அதை அறிஞர் பல பெயரிட்டு அழைக்கிறார்கள்" என்று ரிக்வேதம் கூறுகின்றது (I-164,46).

உலகம் மெய்ப்பொருளின் ஒரு தோற்றமே என்பதையும் வேற்றுமைகளெல்லாம் மாயை என்பதையும் ரிக்வேதம் (VI-47,18) விளக்குகிறது:—

**ரூபம் ரூபம் ப்ரதிரூபோ பபூவ**
**தத் அஸ்ய ரூபம் ப்ரதிசக்ஷணாய**
**இந்த்ரோ மாயாபி: புருரூப ஈயதே**

மெய்ப்பொருள் தன்னுடைய மாயைகளினால் பல உருவங்களை எடுத்துக் கொள்கின்றது. பிரச்ன உபநிஷத்தில் மாயை என்ற மாமயக்கத்தைப் பற்றி (I-16) குறிப்பிடப் பட்டிருக்கிறது. ரிக்வேதம் நாஸதீய ஸூக்தத்திலே, "முதன் முதலில், உலகம் இருந்தது என்பதும் இல்லை; இல்லை என்பதும் இல்லை. தமஸாக, மாயையாக இருந்தது" என்று கூறப்பட்டிருக்கிறது (X,129). நிர்க்குணமான பரம் பொருளே இருந்தது, வேறு சொல் வழக்கிற்குரிய பொருள் அப்பொழுது அங்கு இல்லை என்பது இதன் பொருள். பிருஹதாரண்யக உபநிஷத்திலே, "பரம் பொருளில் இவ்வுலகம் இருப்பதாகத் தோன்றும் அந்த நேரத்திலேயே உண்மையில் இல்லை" என்று கூறப்படுகின்றது. கயிற்றின் தோற்றமான பாம்பு, அது தெரியும் பொழுது கூடக் கயிற்றில் இல்லாதது போல, மெய்ப் பொருளில் முக்காலும் உலகம் இல்லை.

"உலகை மாயை என்றும், மாயையை ஆள்பவனை மகேச்வரன் என்றும் தெரிந்து கொள்" என்று ச்வேதாச்வதர உபநிஷத் (IV-10) கூறுகின்றது. ஸ்ரீமத் பகவத் கீதையிலும் "உலகம் என்னிடம் இல்லை" என்று பகவான் கூறுகிறான்: **ந மத் ஸ்தானி பூதானி** (IX, 5)

ஸ்ரீமத் பாகவதத்தில் மாயையைப் பற்றி விளக்கி "இல்லாதது இருப்பது போல் தோன்றுவது மாயை; உண்மையில் பரம் பொருளில் இல்லாதது" என்று சொல்லப் பட்டிருப்பதைக் காண்கிறோம்:

**ருதே அர்த்தே யத் ப்ரதீயேத**
**ந ப்ரதீயதே ச ஆத்மனி**

இது போன்று வேதத்திலும் கீதையிலும் உள்ள சான்றுகளைக் கொண்டு சங்கரர், பரம்பொருள் நிர்க்குணம் என்பதையும், வேற்றுமைகளற்றது என்பதையும், உலகம் வெறும் தோற்ற மட்டுமே என்பதையும் சொல்லுகிறார்.

இதே போல, உயிரும் பரம்பொருளும் வேறு வேறு அல்ல என்பதனையும், வேற்றுமையான தோற்றமான மாயை மெய்யறிவினால் மாயும் என்றும் மறைச் சான்றுகளைக் கொண்டே நிறுவுகின்றார்.

நீ அதுவாகவே இருக்கிறாய் (**தத் த்வம் அஸி**) என்றும், அறிவும் பரம்பொருளும் ஒன்றே (**ப்ரக்ஞானம் ப்ரஹ்ம**) என்றும், "தானே உயிராய்க் கலந்து" (**அனேன ஜீவேன ஆத்மனா அநுப்ரவிச்ய**) என்பது முதலிய மறை வாக்குகள் உயிரும் பரம்பொருளும் ஒன்றே என்பதை நினைவுறுத்துகின்றன. விழிப்பு, கனவு, தூக்கம் இவற்றை முறையே ஆராய்ந்து இம் மூன்று நிலைகளிலும் ஒளிர்வது மெய்ப்பொருள். உயிரும் மெய்ப்பொருளும் ஒன்றே என்பதை **மாண்டூக்ய உபநிஷத்** விரிவாகச் சொல்லுகின்றது என்று பிரஜாபதி இந்திரனுக்குச் சொன்னார். நிலைத்த

வாழ்வினைப் பெறவிரும்பிய ஒருவன் மனத்தை உள் முகமாகத் திருப்பி மெய்ப்பொருளைக் கண்டான் என்று **கடோபநிஷத்** கூறுகின்றது.

மெய்யறிவினால் பொய்த் தோற்றம் மாயும்; மாயை அகலும் என்பதனை, பகவான் ஸனத்குமாரர் நாரதரை அறியாமையின் அக்கரைக்கு அழைத்துச் சென்றார் என்று **சாந்தோக்கிய உபநிஷத்** சொல்வதையும், "உண்மை தெரிந்து கொண்டு ஒருவன் மரணத்தைக் கடக்கிறான்; அறிந்தவன் இங்கேயே மரண மில்லாதவனாக ஆகிறான்," "விடுதலைக்கு மெய்யறிவைத் தவிர வேறு வழி கிடையாது" என்றெல்லாம் **சுவேதாச்வதர உபநிஷத்** சொல்வதையும் வைத்து அறிந்து கொள்ளலாம்.

வேத வாக்குகளை ஒட்டிய, அவற்றிற்கு முரண்படாத பகுத்தறிவு வரவேற்கத்தக்கது. ஆனால், வேதத்தின் ஆதாரமில்லாத வெறும் பகுத்தறிவைக் கொண்டு தன் போக்காக உண்மையைத் தெரிந்து கொள்ள முடியாது. பகுத்தறிவு நமது புலன்களுடைய வழி அமைந்து கிடப்பது. புலன்களுக்கெட்டாத உண்மைகளை அது அறிய முடியாது. இப்படி இருக்கலாம், அப்படி இருக்கலாம் என்று ஒருவாறு அது ஊகிக்கலாம் என்பது உண்மைதான். ஆனால் இதுதான் உண்மை என்று உறுதியாக அது நேருக்கு நேர் காண முடியாது. அறிவுக்கு அறிவாய் இருக்கும் ஒன்றை அறிவினால் எப்படி அறியமுடியும்? "எதனால் மனம் அறியும் ஆற்றல் பெறுகின்றதோ, எதை மனம் அறிய முடியாதோ, அதை மெய்ப்பொருள் என்று தெரிந்து கொள்வாயாக" என்று **கேன உபநிஷத்** அறிவிக்கின்றது. 'தெரியும் என்று சொன்னவனுக்குத் தெரியவில்லை; தெரியவில்லை என்று சொன்னவனுக்குத்தான் தெரிந்தது." என்றும் இந்த உபநிஷத் சொல்லுகின்றது.

எனவே, யுக்தி அல்லது பகுத்தறிவு வேதநூல் கூறும் மெய்ம்மொழிகளை ஒட்டி அமைந்திருக்க வேண்டும். அப்படிப்பட்ட பகுத்தறிவிற்கு ஓர் எடுத்துக்காட்டு வேண்டுமானால், நம்முடைய உணர்வு நிலைகளான விழிப்பு, கனவு, தூக்கம் என்பனவற்றை ஆராய்ந்து உள்ளிருக்கும் மெய்ப்பொருளியலைத் தெரிந்து கொள்ளும் முறையைச் சொல்லலாம். மாறிமாறி வரும் இம்மூன்று நிலைகளிலும் மாறாது இருக்கும் தத்துவம் மெய்ப்பொருள் என்று நிச்சயம் செய்வதற்கு அன்வய-வ்யதிரேக அனுமானம் பயன்படுகிறது. மேற்சொன்ன மூன்று உணர்வு நிலைகள் இருக்கும்பொழுதும் மெய்ப்பொருள் தோன்றிக் கொண்டிருக்கிறது. அவை ஒன்றிலிருந்து ஒன்று மாறும் பொழுதும் மெய்ப்பொருள் மாறாமல் இருக்கிறது.

வேதநூல்களுக்குப் பொருள் காண்பதற்கும் பகுத்தறிவு வேண்டும். தொடக்கம், முடிவு என்ற இரண்டையும் வைத்துப் பொருள் தெரிந்து கொள்கிறோம். திரும்பத் திரும்ப வலியுறுத்தப்படுதல், புதிதாகச் சொல்லப்படுகின்ற கருத்து, நூலின் பயன், ஒரு கருத்தைப் புகழ்தல், பகுத்தறிவிற்கு ஒத்ததாக இருத்தல் என்ற இந்தக் குறிகளை வைத்தும் பொருள் தெரிந்து கொள்கிறோம். இவை முறையே (1) உபக்ரம-உபஸம்ஹாரம் (2) அப்யாஸம் (3) அபூர்வதா (4) பலம் (5) அர்த்த வாதம் (6) உபபத்தி.

இந்த ஆறும் லிங்கங்கள்' எனப்படும். சாந்தோக்கிய உபநிஷத்தில் ஆறாவது அத்தியாயத்தில், தொடக்கத்தில்: "மெய்ப்பொருள் ஒன்றே; இரண்டற்றது' என்று கூறப்பட்டு, முடிவிலும் "அதுவே எல்லாவற்றிலும் ஆத்மாவாகவும் இருக்கிறது" என்று தெரிவிக்கப்பட்டிருக்கிறது.



உயிரும் மெய்ப்பொருளும் ஒன்றே என்பது ஒன்பது தடவை திரும்பத்திருப்ப வலியுறுத்தப்பட்டிருக்கிறது.

மெய்ப்பொருள் இரண்டற்ற ஒன்று என்பது உபநிஷத் மூலமாக மட்டுமே தெரியக் கூடிய புதிய செய்தியாகும்.

மெய்ப்பொருளாகத் தன்னை உணர்ந்து முக்தி பெறும் பயனும் அங்கு கூறப்பட்டிருக்கிறது. இத்தகைய மெய்ப் பொருளைத் தெரிந்து கொண்டால் எல்லாம் தெரிந்ததாகும் என்று அந்த மெய்யுணர்வு புகழப்படுகிறது. கடைசியாக. உலகில் காணப்படும் மண்ணை எடுத்துக்காட்டி, மண்ணால் செய்யப்பட்ட எல்லாம் மண்ணைத் தவிர வேறில்லை; அவற்றின் வேற்றுமை யெல்லாம் பெயரளவில் தோன்று பவை என்று பகுத்தறிவின் பேரில் உறுதிப்படுத்தப் படுகிறது.

வேத நூல்களைக் கற்பது ச்ரவணம்; அப்படிக் கற்றதை அறிவு கொண்டு உறுதிப்படுத்திக் கொள்வது **மனனம்** என்று வேதாந்தத்திலேயே பயிற்சியாக வகுக்கப்பட்டிருக் கிறது. **ப்ரணிபாதம்** (ஆசிரியனை வணங்குதல்) **பரிப்ரச்னம்** (நன்றாகப் பகுத்தறிவு கொண்டு ஆராய்தல்) **ஸேவா** (குருசேவை) என்ற மூன்றும் பகவத் கீதையில் (IV-34) மாணவனுக்கு விதிக்கப்பட்டிருக்கின்றன.

கௌடபாதருடைய **மாண்டூக்ய காரிகை** (III-1)க்கு உரை செய்யும் பொழுது சங்கரர் சொல்லுவார்: "அத்வை தத்தை வேத நூலின் ஆணை கொண்டுதான் ஏற்க வேண்டுமா? பகுத்தறிவினால் அதை நிறுவ முடியாதா? என்று கேட்கப்படுகிறது. இங்கு அத்வைதத்தைப் பகுத்தறிவு கொண்டும் நிறுவலாம் என்பது காட்டப் படுகிறது."

ஆயினும் பகுத்தறிவு மட்டும் மனம்போன போக்கில் செயல்படுமானால் அதற்கு முடிவில்லாமல் போகும். ஒன்றும்

உறுதியாக நிலைபெறாது. அறிவின் பலம் கொண்டு ஒன்றை நிறுவுவேன் என்று தொடங்கினால், நம்மைவிட அறிவாளி ஒருவன் அதைத் தகர்த்துவிட்டு வேறொன்றை நிறுவுவான். கபிலர் ஒன்றைச் சொன்னால் கணாதர் நேர்மாறான இன்னொன்றைச் சொல்கிறார். இவர்களுக்குள் யார் சொல்லை ஏற்பது? மனித அறிவு பலதரப்பட்டது. முழுவதும் அறிந்தவர்கள் என்று யாரையும் கூறுவதற் கில்லை.

இந்நிலையில் வேதம் சொல்வதைத்தான் ஏற்கவேண்டும். காரணம், அது தனியொரு மனிதனுடைய அறிவினால் கற்பிக்கப்பட்டதன்று. மோனத் தவத்தில் தோன்றிய உள்ளொளியாகும். மெய்யனுபவத்தில் எழுந்த சுடர்கள் இந்த மறைமொழிகள். உண்மையை நேருக்கு நேர் பார்த்து, அதை உள்ளத்தில் வாங்கிப் பின் அந்த நினைவை பிறருக்குச் சொன்னார்கள் சத்திய தர்சிகளான ரிஷிகள்.

அநுபவமே வேதாந்தத்தின் மூலமும் முடிவுமாகும். வேதாந்தம் பயில்வது என்பதும் இந்த மெய்யநுபவத்தைப் பயனாகக் கொண்டதுதான். இதைத்தான் சங்கரர் **அநுபவ-ஆரூடம்-வித்யாபலம்** என்று பிரம்மஸூத்ரத்திற்கு (III-4-15) உரை செய்யும் பொழுது சொல்கிறார். "நானே மெய்ப் பொருள்" என்ற அநுபவம் முதலில் மலர்ந்து "எல்லாம் மெய்ப்பொருளே" என்ற அநுபவமாக விரிகின்றது.

## நிர்க்குணமும் ஸகுணமும்

ப்ரஹ்மம் அல்லது மெய்ப்பொருள் குணங்குறி களற்றது; வேற்றுமைகளற்றது என்பது முன்னர் சொல்லப் பட்டது. உபநிஷத்துக்களில் குணங்களுடையதாக மெய்ப் பொருளை கூறுகின்ற இடங்களும் உண்டு; **ஸர்வகந்த:** (எல்லா மணமும் உள்ளவன்) **ஸர்வரஸ:** (எல்லாச் சுவையும்

உடையவன்) என்றெல்லாம் கூறும் இடங்கள் இருக்கின்றன. இந்த இடங்களில் எல்லாம் நிர்க்குணமான மெய்ப்பொருளை உணர்வதற்கு வழியாக ஸகுண உபாஸனை சொல்லப்படுகிறது. நிர்க்குணப் பொருளை மனதில் எடுத்த எடுப்பில் வாங்குவது கடினம் என்பதைக் கீதையே சொல்லுகின்றது. (XII-5).

நிர்க்குணம் என்பதற்கு, "தீய குணங்களற்ற" என்று மட்டும் பொருள் கொள்ளக்கூடாது. ஏனெனில், ஓரிடத்தில் ஒன்றை மறுக்க முற்பட்டால், அது அந்த இடத்தில் இருக்கக் கூடியதாக இருந்தால் மட்டுமே அங்ஙனம் மறுப்பது அறிவுடைமையாகும். பரம்பொருளிடத்தில் தீய குணங்கள் இருக்கக்கூடும் என்ற ஐயமே எழுந்தாலல்லவா அதை மறுக்க வேண்டிய தேவையும் ஏற்படும்?

**ஸர்வகந்த: ஸர்வரஸ:** என்று சொல்லப்பட்டிருப்பதால், மணம், சுவை என்பதெல்லாம் குணங்களாகையினால் பரம்பொருள் நிர்க்குணமன்று, ஸகுணமே என்று சொல்வதும் சரியன்று. பொதுவாக, மணம் என்ற பௌதிக குணம் பௌதிக உலகத்துப் பொருள்களுக்கு இருக்கலாம். பரம்பொருளோ பௌதிகப் பொருளன்று. அதற்கு மணம், சுவை முதலியன இருப்பதாகக் கொள்ள முடியாது. பௌதிகமில்லாத மணம் முதலியவை இருப்பதற்குச் சான்றுகளுமில்லை. எனவே எல்லாம் பரம்பொருளே என்ற பொருளில்தான் **ஸர்வகந்த:** என்ற வர்ணனை தரப்பட்டிருக்கின்றது.

மேலும் குணம், குணத்தையுடைய பொருள் என்பதெல்லாம் படைப்பிலுள்ள வேற்றுமைகளையொட்டி வகை வகையாக இருக்கலாமேயன்றி, முழுமுதற்பொருளிலே அவ்வித வேற்றுமைகள் இருப்பதற்கு இடமில்லை என்பது தெளிவு. வேற்றுமைகள் எல்லாவற்றிற்கும் மூலமாகத்

தான் முழுமுதற் பொருள் இருக்க வேண்டும். நல்லது, கெட்டது என்ற இரண்டும் நிறைந்தது உலகம். இரண்டையும் தாண்டி, இரண்டிற்கும் மூலமாய் இருப்பது பரம் பொருள். நல்லதெல்லாம் மட்டும் உடையவன் இறைவன்; தீயவை அவனிடம் இல்லை என்று சொல்லும்பொழுது, அந்த இறைவனுடைய விருப்பத்தை எதிர் நோக்கி நிற்காமலே வேறு ஏதோ ஒன்றிலிருந்து தீயவை தோன்றின என்று சொல்ல வேண்டி வரும். இது இறைவனுடைய மாட்சிக்கு மாசு கற்பிப்பதாகும். எனவே குணங்களெல்லாம் மாயையின் கைவண்ணங்கள் என்றும், பரம்பொருள் மாயைக்கு அப்பாற்பட்டு, அதை ஆட்டுவிக்கும் ஆதாரம் என்றும் சொல்லுவதே பொருத்தமாகும். எனவேதான் அது **நிர்க்குணம்** எனப்படுகிறது.

## விவர்த்தமும் பரிணாமமும்

பௌதிக உலகம் ஜடமாக இருக்கிறது. அதற்கு உயிரும் அறிவும் இல்லை. மாயை என்பதும் ஜடம்தான். அதனால் பௌதிக உலகம் முழுதும் மாயையின் **பரிணாமம்** அல்லது மாற்றம் என்று கூறுவார்கள். பால் தயிராக மாறுவது போல ஒன்று மற்றொன்றாக மாறுவது பரிணாமம் எனப்படும். எனவே ஜட உலகத்தின் **பரிணாமி உபாதானம்** மாயை.

ஆனால் மாயையும் அதன் எல்லா விளைவுகளும் பரம் பொருளின் தோற்றமேயாகும். பரம்பொருளே உலகமாக மாறிவிடவில்லை. இவ்வாறு தான் மாறாமல் ஒன்றைத் தன்னிடத்தே தோற்றுவித்துக் கொள்ளுவது **விவர்த்தம்** எனப்படும். எனவே பரம்பொருள் இவ்வுலகத் தோற்றத்துக்கு **விவர்த்த உபாதானம்** என்று சொல்லுகிறோம். வியாஸர் எழுதிய **ப்ரம்ஹ-ஸூத்ரத்தில்** (1-4-27) இவ்வாறு கூறியிருக்கிறார் என்று அப்பய்ய தீக்ஷிதர் முதலிய பெரிய

வர்கள் கருதுகின்றார்கள். "பானை இருக்கிறது" என்று சொல்லும் பொழுது, "இருக்கிறது" என்ற சொல் பரம் பொருளின் இயல்பைக் குறிக்கும். ஏனெனில் அது தான் உண்மையில் இருப்பது. "பானை ஜடம்" என்று சொல்லும்பொழுது அது பானையில் இருக்கும் மாயையின் இயல்பினைக் குறிக்கும்.

## உயிர்தத்துவம் (ஜீவன்)

உயிருக்குத் தொடக்கமில்லை; முடிவுமில்லை. அது உண்மையில் பரம்பொருளே. உடலோடு தோன்றும் பொழுது பிறப்பு என்றும், உடல் மறையும் பொழுது இறப்பு என்றும் வழக்கிருக்கிறதே தவிர, உயிருக்குப் பிறப்புமில்லை, இறப்புமில்லை என்று பிருஹதாரண்யக உபநிஷத் (VI-3, 8). கூறுகின்றது. இதையே கீதையும் கூறுகின்றது.

பரம் பொருளே உயிராக வந்து புகுந்தது என்று தைத்திரீய உபநிஷத் (II.6) கூறுகிறது. (தத் ஸ்ருஷ்ட்வா ததேவ அநுப்ராவிசத்) "தானே உயிராகி" என்று சாந்தோக்கிய உபநிஷத்தும் சொல்லுகிறது. (ஜீவேன ஆத்மனு அநுப்ரவிச்ய.)

விழித்திருக்கும் போதும், கனவிலும், தூக்கத்திலும் இந்த உயிர்த் தத்துவம் அறிவு ஒளியாய் விளங்குகிறது.

தன்னை பிறப்பு இறப்புள்ளவனுக உயிர் நினைப்பது அறியாமையினால். உடல், புத்தி, முதலிய அவித்யா-மாயையின் படைப்புக்களோடு ஒட்டிக் கொண்டிருப்பதால், ஸத்-சித்-ஆனந்தம் என்ற தன்னிலை மறந்து தன்னைச் சிறுமைகளுடையதாக உயிர் எண்ணுகின்றது.

எங்கும் நிறைந்துள்ள ஆகாயம் குடத்தினுள்ளும் இருக்கிறது. ஆனுல் குட அளவே ஆகிச் சிறுத்து விட்டது

போல் தோன்றுகின்றது. குடத்தின் சிறு அளவு ஆகாயத்தைக் குறுக்கி வரையறை செய்து விடுகிறது. இது போல, புத்தி முதலியவற்றினால் வரையறுக்கப்பட்ட மெய்ப் பொருள் சிற்றுயிராகக் காண்கிறது என்று சிலர் சொல்லுகிறார்கள். இது **அவச்சேத வாதம்** (வரையறைக் கொள்கை) எனப்படும்.

சூரியன் ஒன்றாக இருந்தாலும் அது குளம், குட்டை, கிணறு, ஏரி, கடல் எல்லா நீர் நிலைகளிலும் பிரதிபலிக்கும் பொழுது பலவாகக் காண்கிறது. இது போல, ஓரே பரம்பொருள் பல புத்தி நிலைகளில் பிரதி பலிக்கும் பொழுது அவை உயிர்கள் எனப்படுகின்றன என்று மற்றும் சிலர் கூறுகின்றார்கள். இது **பிம்ப-ப்ரதி பிம்பவாதம்** எனப்படும். இவை யிரண்டுமே அத்வைதத்திற்குப் பொருத்தமே யாகும்.

**விஷ்ணு புராணத்திலும்** உயிரும் மெய்ப் பொருளும் ஒன்றே என்று கூறப்பட்டிருக்கிறது.

**ஸः அஹம் ஸ ச த்வம்** (அதுவே நான்; நீயும் அதுவே) என்று அறிவித்து, வேறு வேறாக எண்ணுபவர்கள் அறியாதவர்கள் என்றும் **விஷ்ணு புராணம்** சொல்லுகிறது. **(த்வைதின: அபி அதத்யதர்சின:)**,

"உயிரே பரம்பொருள்" என்ற இது எல்லா வேதங்களின் அறிவுரை, அநுசாஸனம் என்று **பிருஹதாரண்யக உபநிஷத்** (IV-5.19) உறுதி செய்கிறது.

## முக்தி

அறியாமை என்னும் அழுக்கு அகன்றால், நம் உண்மை நிலையில் நாம் தூய்மெய்ப்பொருளாகவே நிற்கக் காண்போம். தூய நீர் தூய நீரோடு கலந்தால் எப்படித் தூய்மை

யோடு இருக்குமோ அது போல தூய்மையான உயிரும் தூய்மையான பரம்பொருளும் வெவ்வேறன்று என்று **கடோபநிஷத் (IV-15) கூறுகின்றது.**

பரம்பொருளை அப்படியே எடுத்துச் சொல்லுகின்ற வேத நூற் பகுதிகள் உண்டு. சிறுமைகள் உடையதாகத் தோன்றுகின்ற உயிர்களும் பரம்பொருளே என்று, தோற்றத்தை மறுத்து உண்மையான ஒருமையைச் சொல்லுகின்ற வேத நூற் பகுதிகளும் உண்டு. முதலில் உயிர் எப்படிக் காட்சியளிக்கிறது என்று சொல்லி, பின்னர் படிப்படியாக அதன் சிறுமைகளை மறுத்து, உண்மை இயல்பினை முடிவாக எடுத்துக் காண்பிப்பது வேதாந்த மரபு. இதைத் தான் **அத்யாரோப-அபவாதம்** என்று சொல்வார்கள்.

"நான் பரம் பொருளாக இருக்கலாம்; ஆனால் பரம் பொருள் நானாக இல்லாமல் இருக்கலாமே" என்ற ஐயப்பாடு அறவே அழிய வேண்டுமென்பதற்காகத் தான், "நான் பரம் பொருள்" என்று சொல்லி "பரம் பொருள் நான்" என்று மாற்றியும் சொல்லுகிறது **ஜாபால உபநிஷத்: அஹம் த்வம் அஸி; த்வம் வா அஹம் அஸ்மி.**

பிரதர்தனன் என்ற அரசனுக்கு இந்திரன் உபதேசிக்கும் பொழுது "என்னை அறிந்து கொள்" என்று சொன்னான். "என்னை" என்றால், இங்கு "மெய்ப்பொருள்" என்று பொருள். மெய்ப் பொருளாகவே தன்னை உணர்ந்து கொண்டவன் இந்திரன். கருவிலிருக்கும் பொழுதே வாமதேவர் தம்மை மெய்ப் பொருளாக மெய்யுணர்வு பெற்றார். அதனால் "நானே சூரியன்; நானே மனு" என்று சொன்னார். இந்த வாமதேவரை மேற்கோள் காட்டி வியாஸர் பேசியிருக்கிறார் தமது **ப்ரம்ஹ-ஸூத்ரத்திலே (I-1.30).**

## முக்திக்கு வழி

தன்னையுணர்தலே முக்திக்கு வழி. தகுந்த குருவினிடம் பரம் பொருள், உயிர் இவற்றின் ஒருமையைச் சொல்லும் உபநிஷத் வாக்கியங்களை நன்கு கசடறக் கற்றுப் பொருள் தெரிந்து உறுதி செய்துகொண்டு, பின் அதை மனதில் இருத்தி இடைவிடாது தியானம் செய்யவேண்டும்.

அறியாமையை அகற்றிக் கொள்வதே முக்திக்கு வழி. அறியாமை அகலுவதும், உண்மை யொளி பிறப்பதும் ஒன்றே. குடத்துள் வைக்கப்பட்டிருக்கும் விளக்கு குடம் உடைந்தவுடன் தானே தெரிவது போல, அறியாமை அகன்றவுடன் உண்மை தன்னொளி வீசி தானே தெரியும்.

அனேக ஆயிரம் ஆண்டுகள் அடைந்து கிடக்கிற குகை இருட்டு ஒரே நொடியில் சிறு வெளிச்சத்தால் அகன்று விடுவது போல, அனேக பிறவிகளில் தொடர்ந்த அறியாமை இருள், ஒரே அறிவுச் சுடரால் அழிந்து போகும்.

## கர்மமும் பக்தியும்

அறியாமை தான் பிறவிக்குக் காரணம் என்பதால் மெய்யறிவு ஒன்று தான் அதனை நீக்கும் ஆற்றல் உடையது என்று பெறப்பட்டது. இங்கு நம்முடைய சொந்த இயல்பினை உணருவது தான் முக்கியமானது. இதைத் தவிர செய்யவேண்டியது என்ற ஒன்றும் இல்லை.

எப்பொழுது செயல் செய்யவேண்டும்? ஏற்கனவே நம்மிடம் இல்லாத ஒன்றை அடைய விரும்பும் போதும். வேறொரிடத்துக்குச் செல்ல விரும்பும் போதும். ஒரு பொருளை இன்னொன்றாக மாற்ற நினைக்கும் போதும், ஒரு பொருளைத் தூய்மைப் படுத்த நினைக்கும் போதும் நாம் செயல் செய்யவேண்டியிருக்கிறது. பயிரை விளைவித்தல்

அடுத்த ஊருக்குச் செல்லுதல், பாலைத் தயிராக மாற்றுதல், கண்ணாடியைத் துடைத்தல் என்பவை போன்ற காரியங்களைச் செய்யவேண்டும்.

ஆனால் நாம் மெய்ப் பொருளாகவே இருப்பதுதான் உண்மையாதலால், புதிதாக உண்டுபண்ண வேண்டுவது ஒன்று மில்லை; வேறொரிடத்துக்குப் போக வேண்டுவது மில்லை; நாம் மாறவேண்டியதுமில்லை; நம்மைத் தூய்மைப் படுத்திக் கொள்ளவேண்டிய தேவையுமில்லை.

ஆயினும், மெய்யறிவினைப் பெறுவது எடுத்த எடுப்பிலேயே முடிகிற காரியமன்று. அதற்காக நெடுங்காலம் பயிலவேண்டும். உள்ளத் தூய்மையையும், அறிவின் கூர்மையையும் வளர்த்துக் கொள்ளவேண்டும். அதற்குரிய ஒரே வழி, நமக்கென்று வகுக்கப்பட்டிருக்கும் வேத நெறிதன்னை ஒழுக்கத்தோடு கடைப்பிடித்து, மனத் தூய்மை பெறுவதுதான்.

குருவினிடம் அறிவு சார்ந்த பயிற்சி பெற்று, சிந்திக்கும் திறனை வளர்த்துக் கொள்ளவேண்டும். மேலும், இறைவனிடத்துப் பக்தி செய்து அவனருளைப் பெற வேண்டும். இறைவனருள் இன்றேல் ஆத்ம போதத்தில் இச்சை கூட வராது.

ஈச்வர-அநுக்ரஹாத் ஏவ பும்ஸாம் அத்வைத வாஸனா.



# ஆத்ம போதம்

## 1. இந்த நூல் யாருக்கு?

தபோபி: க்ஷீணபாபானும் சாந்தானும் வீதராகிணும்
முமுக்ஷூணும் அபேக்ஷ்யோயம் ஆத்மபோதோ விதீயதே

*அயம் - இந்த, ஆத்மபோத:- ஆத்மபோதம் என்னும் நூல், தபோபி:- தவங்களால், பாபானும் - பாவங்களை, க்ஷீண - அழித்தவர்களும், சாந்தானும்-அமைதி பெற்றவர்களும், வீதராகிணும் - ஆசைகளை விட்டவர்களுமான, முமுக்ஷூணும் - முக்தியை விரும்புகின்றவர்களின், அபேக்ஷ்ய - பொருட்டு, விதீயதே - அருளப் பெறுகின்றது.*

இந்த ஆத்ம போதம் என்னும் நூலானது தவங்களால் பாவங்களை அழித்தவர்களும், அமைதி பெற்றவர்களும், ஆசைகளை விட்டவர்களுமான முமுக்ஷூக்களின் பொருட்டு அருளப் பெறுகின்றது.

ஆத்ம போதம் என்றால் தன்னறிவு என்று பொருள். அது இந்நூலிலே, ஸ்ரீ சங்கரரால் விளக்கப்படுகின்றது. வேதாந்த நூல்களான உபநிஷத்துக்களிலும், பகவத் கீதையிலும் தன்னைத்தானறிதல் என்ற மெய்யுணர்வு எடுத்துச் சொல்லப்படுகின்றது. எங்கும் நிறைந்து இரண்டற்றதாக விளங்கும் பரப்பொருள் பல உயிர்களாகப் பல்கிக் காணப் படுகின்றது. உண்மையில் உயிர்களெல்லாம் பரம்பொருளை

யன்றி வேறல்ல. இதே போல், தூய பேரறிவாக இருக்கும் பரம்பொருள் இந்த ஜட உலகமாகவும் பல்கித் தோற்றங் கொள்ளுகின்றது. எனவே, பல உயிர்களாகவும், பல உலகங் களாகவும், உலகத்துப் பொருள்களாகவும் காணப்படுவது யாவும் ஒரே பரம்பொருள் தான். இந்த ஒருமை உண்மையை அறிந்து கொள்ளாத வரை உயிர்களுக்குப் பிறப்பும் இறப்பும் மாறி மாறி வந்து கொண்டு தான் இருக்கும். அறியாத இந்த நிலைதான் அவித்யை எனப்படும். உண்மையை மறைத்து அதைப் பல வடிவங்களாகக் காண்பிக்கும் ஏமாற்று வித்யை மாயை எனப் பெறும். அவித்யா, மாயை என்ற இந்த சக்தியினால் உண்மை மறைந்து அதன் இடத்தில் அதற்கு மாறான பொய்த் தோற்றங்கள் விளைவிக்கப்படுகின்றன. மறைத்தல் ஆவரணம் எனப்படும்; பொய்யைத் தோற்றுவித்தல் விக்ஷேபம் எனப்படும். இவை மாயையின் தொழில்கள். உண்மையை மறைத்து, தான் முன் வந்து நம்மை வலியக்கவரும் பொய்த் தோற்றத்தை நீக்குவதற்கு ஒரே வழி உண்மையை அது உள்ளபடி உணர்வது தான். நாம் உண்மையில் யார் என்பதை உணர்ந் தால் பொய் மாயத் தோற்றங்கள் மறையும். கனவிலி ருந்து விழித்துக் கொண்டவுடன் கனவுக் காட்சிகள் மறைந்து பொய்த் தோற்றங்கள் என்று உணரப்படுவது போல, மெய்புணர்வு ஏற்படும் போது, "நான் இந்த உடலன்று, உடலுறுப்புக்களன்று, மனமோ புத்தியோ அன்று; இவற்றுக்கெல்லாம் நிலைக்களனாய், உண்மையாய் நிற்கும் பேரறிவே நான்; எனக்கு இன்ப துன்பங்களில்லை; பிறப்பு இறப்புக்களில்லை வேண்டுதல் வேண்டாமை இல்லை; நான் ஸச்சிதாநந்தப் பொருள்; நித்ய-சுத்த-புத்த-முக்த-ஸத்திய வஸ்து. ஏதோ உடலோடு ஒட்டி உறவாடி ஒன்றுபட்டு, அது பிறக்கும் பொழுது நான் பிறந்தேன் என்றும், அது இன்ப துன்பங்களை நுகரும் பொழுது அவை எனக்கேற்

பட்ட உணர்வுகளென்றும், அது இறக்கும் பொழுது நான் இறக்கிறேன் என்றும் நினைப்பது தன்னிலை மறந்த அறியாமையினுல் விளைந்த மயக்கம். உடலை நாளுகவும் என்னை உடலாகவும் மயங்குவது அத்யாஸம் எனப்படும்.

நம்முடைய மெய் வடிவம் எத்தனையது என்று மெய்ந் நூல்கள் எடுத்துரைக்கின்றன. நல்லொழுக்கத்தில் நின்று தவத்தைப் பழகி உள்ளத்தைத் தூய்மையாக்கி அறிவைக் கூராக்கி. நல்லாசிரியர்கள் மூலம் மெய்ந்நூல்களைக் கற்று, நம் நிலையை உள்ளது உள்ளபடி உணர்ந்து அமைதி பெறுவது தான் உயிர் வாழ்க்கையின் பயன். நம்முடைய மெய்யான வடிவம் என்பது மாயை நீங்கின ஸத்-சித்-ஆனந்தம். இதை ஐயந்திரிபற உணர்தல் ஆத்ம போதம் எனப்படும். இதை விரும்புகின்றவன் முமுக்ஷு எனப் படுவான். விரும்பித் தவங்களை மேற்கொண்டு, உள்ளத்து மாசுகளை இவன் நீக்கிக் கொள்கிருன். உலகத்து ஆசைகள் என்னும் புயற் காற்றினுல் அலைக்கப்படாமல் அமைதியை இவன் வளர்த்துக் கொள்கிருன். பொருள்களில் பற்று வைத்தல், உற்ருர் உறவினர், தம் மக்கள் மனைவி, தம் உடைமை என்று தன்னை உறவு என்னும் சங்கிலிகளால் வலியப் பிணைத்துக் கொள்ளுதல் என்பது போன்ற ஈடுபாடுகளை வெறுத்து விலக்குகிருன். இத்தகைய பக்குவத்தினை, பண்பினைப் பெற்ற இந்த முமுக்ஷுவுக்கு ஆத்ம போதம் என்ற இந்த நூல் சொல்லப்படுகின்றது. நன்ருகக் களை பிடுங்கி ஆழ உழுது, உரமிட்டுப் பண்பட்ட நிலத்திலே விதை விதைத்துப் பயிர் செய்வது போல, நல்ல பயிற்சியினுல் பண்பட்ட உள்ளத்தில் இந்த மெய்ந்நூல் விதைக்கப்படுகின்றது. விளை நிலத்து மகசூல் தானியப் பெருக்காகக் கிடைப்பதுபோல, இந்த மெய்ந்நூலைப் படிப்ப தால் தன்னைத் தானறிந்து முக்தி பெறலாம்.

"மெய்ந்நூல்களான வேதங்களை ஓதுவதனாலும், வேள்விகளினாலும், கொடையாலும், தனியிடத்தே தவமிருந்து தியானம் செய்வதனாலும், அளவறிந்து உண்பதாலும் நல்ல மனிதர் உண்மையை அறிய விரும்புகிறார்கள்; அப்படி அறிவதற்குத் தகுதி பெறுகிறார்கள்" என்று **பிருஹதாரண்யக உபநிஷத்** கூறுகின்றது.

உண்மையை ஆராயப்புகுமுன் ஒருவன் மனப்பக்குவம் பெற்றிருக்க வேண்டும் என்பதை இது காட்டுகிறது. தெளிந்த கண்ணாடியில் உருவம் தெளிவாகக் காணப்படுவது போல, பண்பட்ட உள்ளத்தில் உண்மை துல்லியமாகத் தெரியும். கீழ்க்கண்ட நான்கு வகைப் பண்புகளை ஒருவன் வளர்த்துக் கொள்ள வேண்டும்:— 1. எது கடைசி வரை நிற்கும், எது சிறிது காலம் இருந்துப் பின் மாறி விடும் என்று பகுத்தறிய வேண்டும். **நிலையாதனவற்றை நிலைத்தன என்று உணரும் புல்லறிவாண்மை கடை** என்று வள்ளுவர் கூறினார். எனவே **நித்ய-அநித்ய-வஸ்து-விவேகம்** முதற் பண்பு.

2. இம்மையிலும் மறுமையிலும் எந்த விதமான இன்பங்களுக்கும் ஆசைப்படக் கூடாது. இது **இஹ-அமுத்ர-அர்த்த-போக விராகம்** எனப்படும்.

3. **சமம், தமம், உபரதி, திதிக்ஷா, சிரத்தா, ஸமாதானம்** என்ற ஆறு நல்லியல்புகளை வளர்த்துக் கொள்ள வேண்டும். இவற்றுள் **சமம்** என்பது மன அடக்கம். **தமம்** என்பது புலனடக்கம். **உபரதி** என்பது அவா அறுத்தல் அல்லது ஆசை நீத்தல். **திதிக்ஷா** என்பது பொறுமை. **சிரத்தா** என்பது உள்ளார்ந்த நம்பிக்கை. **ஸமாதானம்** என்பது உள்ளமைதி.

4. முமுக்ஷுத்வம், உலகத்துப் பிணைப்பை வெறுத்து வீடு பேறு பெற விழைதல்.

இவை நான்கும் ஸாதன சதுஷ்டயம் (நால்வகைப் பயிற்சிகள்) எனப்படும்.

## 2. மெய்யறிவு முக்திக்கு நேர்வழி

போதோ அன்ய ஸாதனேப்யோ ஹி
ஸாக்ஷான்-மோக்ஷைக ஸாதனம்
பாகஸ்ய வஹ்னிவத்-ஞானம்
விநா மோக்ஷோ ந ஸித்த்யதி

*அன்ய - மற்ற, ஸாதனேப்ய:- வழிகளுடன் ஒப்பிடும்போது, ஹி- நிச்சயமாக, போதோ - மெய்யுணர்வு, ஸாக்ஷாத் - நேராக, மோக்ஷ - முக்திக்கு, ஏக-ஒரே, ஸாதனம் - வழியாகும், பாகஸ்ய - சமையலுக்கு, வஹ்னி - நெருப்பை, வத் - போல, ஞானம் - மெய்யறிவு, விநா- இல்லாமல், மோக்ஷ:- முக்தி, ஸித்த்யதி - கிட்டுவது, ந - இல்லை.*

*மற்ற வழிகளுடன் ஒப்பிடும்போது நிச்சயமாக மெய்யுணர்வு முக்திக்கு நேரான வழியாகும். சமையலுக்கு நெருப்பைப் போல, மெய்யுணர்வு இன்றேல் முக்தி கிட்டாது.*

உணவைச் சமைக்க வேண்டுமானால், நெருப்பு இன்றியமையாத தேவையல்லவா? அதைப் போல, முக்திக்கு ஞானம் இன்றியமையாத நேர்வழி. பிறவித் தளையும் துன்பமும் நமது மெய்ந்நிலையை மறந்ததால் நேர்ந்த இடர்கள். அறியாமைக்கு மருந்து அறிவுதான். ஒன்றை இன்னொன்றாக நினைத்து விடுவது பொய்யறிவு. பழுதையைப் பாம்பாக எண்ணுவதும், கிளிஞ்சலை வெள்ளியாக நினைப்பதும், சோளக் கொல்லைப் பொம்மையை நிஜ

மனிதனைக் கருதுவதும், கானல் நீரை உண்மை நீர் என்று மருள்வதும் இத்தகைய பொய்யறிவுகள். இதே போல், ஆகாயம் நீலமாகத் தெரிவதும், தண்ணீரில் ஆழ்த்தப்பட்ட நேர்க்குச்சி வளைந்ததாகக் காண்பதும், சமமான ரயில் பாதை தொலைவில் சேர்ந்து கூடுவதாகத் தோன்றுவதும் எல்லாமே பொய்யறிவுகள் தாம். இவற்றையெல்லாம் போக்குவதற்கு ஒரே வழி, இவற்றைப் பற்றிய உண்மையை உணர்வது தான் அல்லவா? உதாரணமாக, கயிற்றைப் பாம்பாக நினைத்து அரண்டு விடுகின்றோம். அந்தப் பாம்பைத் தடி கொண்டு அடித்தால் சாகுமா? கருட மந்திரம் ஜபித்தால் மறையுமா? உண்மையான பாம்பாக இருந்தால் இப்படியெல்லாம் செய்யலாம். ஆனால் இது பொய்ப் பாம்பல்லவா? கயிற்றை உள்ளபடி தெரிந்து கொண்டால்தான் பாம்பின் தோற்றம் அழியும்.

கருமமும் பக்தியும், தியானமும் முக்திக்கு நேர் வழிகளல்ல என்றாலும் அவை மெய்யறிவு தோன்றுவதற்கு உதவுகின்றன. ஸாக்ஷாத் உபகாரகம் அல்ல; ஆராத் உபகாரகம். அதாவது, எட்ட நின்று உதவுகின்றன. "உண்மை ஞானத்தைத் தவிர்த்து முக்திக்கு வேறு வழியே கிடையாது" என்றும் "பரம்பொருளை அறிந்துதான் ஒருவன் அறியாமை என்னும் மரணத்தைத் தாண்டுகிறான்" என்றும், "கர்மா வினாலோ, பணத்தினாலோ ஒருவன் இறவாமை அடைவ தில்லை; துறவினாலே (ஞானத்தினாலே) தான் அதை அடைய முடியும்" என்றும் மறைகள் பேசும்.

"உள்ளத் தூய்மைக்குக் கரும யோகம் உதவும்; அதன் பிறகு மெய்யறிவுதான் முக்திக்குச் சாதனம்" என்றும், "மெய்ப்பொருளை அறிந்து ஒருவன் தீமையைக் கடக்கிறான்" என்றும், "மெய்யறிவைப் போல தூயது வேறு இல்லை" என்றும் கீதை கூறுகின்றது.

## 3. செயலினுல் முக்தி வராது

**அவிரோதிதயா கர்ம ந அவித்யாம் விநிவர்த்தயேத்**
**வித்யா அவித்யாம் நிஹந்தி ஏவ தேஜஸ் திமிர ஸங்கவத்**

*கர்ம - செயல், அவிரோதிதயா - (அறியாமைக்கு) எதிரியன்று, ஆதலால், அவித்யாம் - அறியாமையை, விநிவர்த்தயேத் - நீக்குவது, ந - இல்லை. வித்யா - மெய்யறிவு, அவித்யாம் - அறியாமையை, ஏவ - நிச்சயமாக, நிஹந்தி - அழிக்கிறது, தேஜஸ் - ஒளி, திமிரஸங்க - இருட்கூட்டத்தை, வத் - போல.*

*(அறியாமைக்கு)க் கருமம் (செயல்) எதிரியன்று, ஆதலால் அது அறியாமையை அகற்ருது. ஆனுல் அறிவு அறியாமையை அழித்தே தீரும், ஒளி இருட் கூட்டத்தை (அழிப்பது) போல.*

செயல் செய்பவன், செயப்படும் பொருள், செய்கை என்ற வேற்றுமைகளெல்லாம் மாயையின் விளைவான தோற்றங்கள். இவற்றை உண்மை என்று கொள்வது அறியாமை. அறியாமை இருக்கும் வரைதான் செயல் இருக்கும். செயல் அறியாமையினுல் விளைவது. எனவே, அது அறியாமைக்கு எதிரியன்று; மாருக, அதன் குழந்தை அது. அதோடு தொந்த சொந்த முடையது.

வேற்றுமைகள் என்ற தோற்றத்தை ஒருமை என்ற உண்மையறிவினுல்தான் அழிக்க முடியும். இருளை அழிக்க வேண்டுமானுல் ஒளி வேண்டும். இருளும் ஒளியும் ஓரிடத்தில் சேர்ந்திருக்க முடியாது.

"எல்லாச் செயல்களையும் மெய்யறிவு எரித்து விடுகிறது" என்று கீதை சொல்லுகின்றது. "எல்லாம் ஒன்ருகி விட்டால் எதைக் கொண்டு எதைப் பார்க்க முடியும்" என்று உபநிஷத்தும் கேட்பது நம் காதில் ஒலிக்கிறது.

## 4. சிறுமை உணர்விற்கு அறியாமை காரணம்

**அவச்சின்ன இவ அக்ஞானத் தந்நாசே ஸதி கேவல:**
**ஸ்வயம் ப்ரகாசதே ஹி ஆத்மா மேகாபாயே அம்சுமான் இவ**

*அஞ்ஞானத் - அறியாமையினால், ஆத்மா - மெய்ப்பொருள், அவச்சின்ன - சிறுமைப்பட்டது, இவ - போலத் (தோன்றுகிறது). தத் - அது, நாசே ஸதி - அகன்றால், கேவல: - தனித்து, ஸ்வயம் - தானாகவே, ப்ரகாசதே - விளங்குகின்றது, மேக - மேகங்கள், அபாயே - நீங்கினவுடன், அம்சுமான் - சூரியன், இவ - போல.*

**அறியாமையினால் மெய்ப்பொருள் (ஆத்மா) ஏதோ சிறுமைப்பட்டதுபோல் (தோன்றுகிறது). அது அகன்றால், தனித்துத் தானாகவே விளங்குகின்றது, மேகங்கள் நீங்கியவுடன் சூரியன் (விளங்குவது) போல.**

ஆயிரக்கணக்கான மேகங்கள் சேர்ந்தாலும் சூரியனை மறைக்க முடியுமோ? அதன் இயற்கை ஒளிதான் மாறுமோ? மேகங்கள் மட்டுமன்று; ஒரு விரலை நம் கண் மீது வைத்தால் கூட அது சூரியனை மறைத்து விடும். அது போல நம் மனத்துள் இருக்கும் ஒரு சிறிய அறியாமையும் உண்மையை நம் கண்ணிலிருந்து மறைத்து விடும்.

மேலும், தன்னை மறைக்கின்ற மேக மூட்டத்தைக் கூட நமக்கும் புலப்படும்படி செய்வது சூரியனின் ஒளி தான். இது போல, "எனக்குத் தெரியவில்லை" என்பதையும் நமக்குத் தெரியப்படுத்துவது நாமாகவே இருக்கும் ஆத்ம ஒளி தான்.

"ஒன்றுமே தெரியாமல் தூங்கினேன்" என்று சொல்கின்றோம். "ஒன்றுமே தெரியவில்லை" என்பதையும் துலக்கிக் காட்ட ஓர் அறிவு வேண்டுமல்லவா? ஓர் அறையில்

இருக்கும் பொருள்களைக் காண்பிப்பதற்கு ஒளி வேண்டியிருப்பது போலவே, அந்த அறை காலி என்பதைக் காண்பிப்பதற்கும் ஒளி வேண்டும்.

குடத்திலிட்ட விளக்கு வெளியே தெரிவதில்லை. அக்குடத்தை உடைத்து விட்டால், விளக்கு தானே தெரியும். விளக்கிருப்பதைத் தெரிந்து கொள்ள அப்பொழுது இன்னொரு விளக்குத் தேவையில்லை. இதுபோல, மெய்யொளியைத் தடுத்து மறைக்கும் அறியாமைத் திரையைக் கிழித்தெறிந்தால், அவ்வொளி தானே பிரகாசிக்கும். தடைகளை நீக்குவது மட்டுமே நாம் செய்ய வேண்டுவது. உண்மையை நாம் உண்டு பண்ணுவதில்லை. அது இருப்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்; அவ்வளவுதான். உண்மை சிறிது மறைந்திருக்கலாம்; அது அழிவதில்லை.

நம் ஒவ்வொருவருடைய இயற்கையே இந்த மெய்ப் பொருள்தான். ஆகவே முக்தி நிலை என்பது நமது சொந்த நிலை; பிறப்புரிமை. புதிதாய் எங்கிருந்தோ கொண்டு வருவதன்று. நாம் நாமாக நம் இயற்கையான உருவில் இருப்பது தான் முக்தி. நம்முடையது என்று நாம் இப்பொழுது நினைத்திருக்கும் ஒன்றும் உண்மையான நாமல்ல.

## 5. அறியாமையை நீக்கும் அறிவு

அஞ்ஞான கலுஷம் ஜீவம்
ஞானப்யாஸாத் விநிர்மலம்
க்ருத்வா ஞானம் ஸ்வயம் நச்யேத்
ஜலம் கதக ரேணுவத்

ஞான-மெய்யறிவின், அப்யாஸாத் - பயிற்சி மூலமாக, அஞ்ஞான - அறியாமையினால், கலுஷம் - மாசுற்ற, ஜீவம் - உயிரை, விநிர்மலம் -

மாசற்றதாக, க்ருத்வா - செய்து, ஞானம் - அறிவு, ஸ்வயம் - தானும் நச்யேத் - அழிகிறது, ஜலம் - தண்ணீரை, கதகரேணு - கதகத் தூளை, வத் (போல).

**மெய்யறிவின் பயிற்சி மூலமாக அறியாமை அழுக்கினால் மாசுற்ற உயிரினை மாசற்றதாகச் செய்து அறிவு தானும் அழிந்துவிடுகின்றது, கதகத் தூளைப் போல.**

உபநிஷத்தின் சொற்களை ஆசிரியன் மூலம் நன்கு ஆய்ந்து கற்று, அவற்றின் கருத்துப் பொருளை மனத்தில் வாங்கிக்கொண்டு அதையே உறுதியாக எப்பொழுதும் நினைந்திருந்தால் மெய்யறிவு தோன்றும். இந்த மெய்யறிவு மனத்தின் சிந்தனைத் தொழிலால் தோன்றுவது. இரண்டற்ற மெய்ப்பொருளைக் காண்பிக்கும் அறிவு இது. இது **அகண்டாகார-வ்ருத்தி** எனப்படும்.

ஒரு புஸ்தகத்தைப் பற்றிய அறிவாக இருந்தால் அது **புஸ்தகாகார-வ்ருத்தி**யாக இருக்கும். மெய்ப் பொருளைப்பற்றி எழுந்த அறிவானதால் இது மற்ற எல்லா அறியாமைகளையும் பொசுக்கி விடுகிறது; மனத்தின் தொழில் மட்டும் கடைசி அறியாமையாக ஒன்றே ஒன்று மிஞ்சி நிற்கிறது. அதையும் அழித்துவிட்டு, வேறு அழிப்பதற்கு அறியாமை மிச்சமில்லாமையால் இந்த அறிவு தானும் அழிந்துவிடுகிறது. கற்பூரத்தை எரித்த நெருப்பு தானும் அணைந்துவிடுவது போல அகண்டாகார வ்ருத்தியும் அழிந்து விடுகிறது. அப்படி அழியும் பொழுது மெய்ப் பொருட் காட்சியைத் தந்து விட்டு அழிகிறது. மிஞ்சுவதும் மெய்க் காட்சியே. இதுவே **ஸாக்ஷாத்காரம்** எனப்படும்.

கலங்கிய நீரில் கதகத்தூளைப் போட்டால் அது நீரைத் தெளிவித்துத் தானும் அடியில் சென்று தங்கும்.

அப்படி இந்த அகண்டாகார வ்ருத்தி என்ற மனத்தின் அறி தொழிலும் மெய்க் காட்சியைத் தந்து விட்டு மறைந்து விடுகிறது.

இடுகாட்டில் வெட்டியான் பிணத்தை நன்றாக எரிப்பதற்காகப் பயன் படுத்தும் தடியையும் கடைசியில் அத்தீயிலேயே போட்டு விடுவான். கனவில் வரும் புலி நம்மை எழுப்பி விட்டுத் தானும் மறைந்து விடுகின்றது.

## 6. கனவைப் போன்றது உலகு

ஸம்ஸார: ஸ்வப்ன துல்யோ ஹி
ராகத்வேஷாதி ஸங்குல:
ஸ்வகாலே ஸத்யவத் பாதி
ப்ரபோதே ஸதி அஸத் பவேத்.

*ஸம்ஸார:- பிறப்பும் இறப்பும், ராக - விருப்பு, த்வேஷ - வெறுப்பு, ஆதி-முதலியவை, ஸங்குல - நிரம்பியதாய், ஸ்வப்ன-கனவை, துல்ய - போன்றதாக (இருக்கிறது). ஸ்வகாலே - தான் நிகழும்போது, ஸத்யவத் - உண்மைபோல. பாதி - தோன்றுகிறது. ப்ரபோதே - விழிப்பு, ஸதி - ஏற்பட்டவுடன், அஸத் - இல்லாமல், பவேத் - போய் விடுகிறது.*

பிறப்பிறப்பு என்ற இந்த ஸம்ஸாரமானது விருப்பு வெறுப்புக்கள் நிரம்பியதாய்க் கனவைப் போன்றல்லவா இருக்கின்றது! அது நிகழும் பொழுது உண்மை போலத் தோன்றுகிறது; விழித்துக் கொண்டவுடன் இல்லாமற் போய் விடுகிறது.

உண்மை விளங்காத அறியாமை நிலையும் ஒரு கனவு போன்ற நிலைதான். விழித்துக் கொண்டவுடன் கனவு மறைந்து விடுவதைப் போல, மெய்யுணர்ந்தவுடன் வேற்றுமைப் பார்வைகள் போய்விடும். தத்துவ நோக்காகப் பார்த்தால் நமது நனவுலகமும் கனவு தான், அதிலிருந்து நம்மை எழுப்புவது மெய்யறிவு என்பார் கௌடபாதர். மெய்யறி

வாளர் உலகத்தைப் பற்றியவரை தூங்கி, உண்மைப் பொருளில் எப்பொழுதும் விழிப்புடனிருப்பார்கள் என்பது கீதை.

உலகம் ஐயத்துக்கிடமில்லாமல் கண் முன்னால் தெரிகிறது என்ற காரணத்தினால் அது உண்மையாகி விடாது. கனவுகள் எவ்வளவு நிச்சயமாகத் தெரிகின்றன! விழித்துக் கொண்டவுடன் எவ்வளவு நிச்சயமாக இல்லாமற் போய் விடுகின்றன!

## 7. கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளிபோல்

தாவத் ஸத்யம் ஜகத் பாதி
சுக்திகா ரஜதம் யதா
யாவந் ந ஞாயதே ப்ரஹ்ம
ஸர்வ அதிஷ்ட்டானம் அத்வயம்

*யாவத் - எதுவரை, ஸர்வ - எல்லாவற்றிற்கும், அதிஷ்டானம் - இருப்பிடமாயும், அத்வயம் - இரண்டற்றதாயுமுள்ள, ப்ரஹ்ம - மெய்ப் பொருள், ஞாயதே - அறியப்பட, ந - இல்லையோ, தாவத் - அதுவரை, ஜகத் - உலகம், ஸத்யம் - உண்மையாக, பாதி - தோன்றுகிறது, சுக்தி காரஜதம் - சிப்பியில் தோன்றும் வெள்ளி, யதா - எப்படியோ (அப்படி).*

*எதுவரை எல்லாவற்றிற்கும் அடிப்படையான இரண்டற்ற பரம் பொருள் (ப்ரஹ்மம்) அறியப்பட வில்லையோ, அதுவரை உலகம் உண்மை போலத் தோன்றுகிறது; கிளிஞ்சலில் தோன்றும் பொய் வெள்ளி போல.*

*உண்மை தெரியாதவரையில் பொய்கள் தலைவிரித் தாடும். கிளிஞ்சல் சரியாகத் தெரியாததால் அந்த வெள்ளி வந்து புகுந்து கொண்டது. கிளிஞ்சலைப் பற்றிய அறியாமை தான் அந்த வெள்ளித் தோற்றத்திலுள்ள சரக்கு.*

உலகத்தின் தோற்றத்திற்குப் பரம்பொருள் நிலைக்களனா யிருக்கிறது; அதிஷ்டானமா யிருக்கிறது. பால் தயிராவது போல, பரம்பொருள் உலகமாக மாறிவிடவில்லை. கிளிஞ்சல் வெள்ளியாகத் தோன்றுவது போல, பரம்பொருள் உலகமாகத் தோன்றுகிறது. இம்மாதிரித் தோற்ற மேற்படுவது விவர்த்தம் எனப்படும். ஒரு பொருள் தன்னிலே திரியாமலே இன்னொன்றாகத் தோற்றமளிக்குமானால் அங்கு விவர்த்தம் ஏற்படுகிறது. அந்த மாறாத பொருள் அந்தத் தோற்றத்திற்கு அதிஷ்டானம். தன்னிலே திரிந்து இன்னொரு பொருளாக ஒன்று மாறும் பொழுது அது பரிணாமம் எனப்படும்.

## 8. எல்லாவற்றிற்கும் இடம் மெய்ப்பொருள்

**உபாதானே அகிலாதாரே ஜகந்தி பரமேச்வரே**
**ஸர்க ஸ்திதி லயான் யாந்தி புத்புதானி இவ வாரிணி**

*உபாதானே - முதற்காரணமாயும், அகில - எல்லாவற்றிற்கும், ஆதாரே - ஆதாரமாயும் உள்ள, பரமேச்வரே - இறைவனிடத்தில், ஜகந்தி - உலகங்களெல்லாம், ஸர்க - தோற்றத்தையும், ஸ்திதி - இருப்பையும், லயான் - ஒடுக்கத்தையும், யாந்தி - அடைகின்றன, வாரிணி - தண்ணீரில், புத்புதானி - குமிழ்கள், இவ - போல.*

எல்லாவற்றிற்கும் உபாதானகாரணமாகவும், ஆதாரமாகவும் இருக்கிற இறைவனிடத்தில் உலகங்களெல்லாம் தோன்றி, இருந்து, பின் ஒடுங்குகின்றன, நீரில் குமிழ்கள் போல.

மண்ணால் செய்யப்பட்டிருக்கின்ற பொருள்களுக்கெல்லாம் மண் என்பது உபாதான காரணம் ஆகும். இதை முதற் காரணம் என்பர். எதில் ஒரு பொருள் தோன்றி, இருந்து, பின் ஒடுங்குகின்றதோ அது அதன் உபாதான காரணம்.

எனவே மெய்ப்பொருள் உலகத்தின் உபாதான காரண மாகும்.

உலகத்தை உண்மையென்று கொண்டு அதனைப் படைப்பது, காப்பது, அழிப்பது யார் என்று கேட்டால், இறைவன் என்று சொல்ல வேண்டும். இது பரம் பொருளுக்குத் தடஸ்த-லக்ஷணம் அல்லது தற்செயலான இலக்கணம் என்று சொல்கிறோம். இப்பொழுதுதான் அது இறைவன் என்ற பெயரும் பெறுகிறது. இது மாயை யோடு கூடிய நிலை. ஆனால் பரம்பொருளின் உண்மையான இயல்பு ஸத்-சித்-ஆனந்தம் (என்றுமுள தன்மை, அறிவு, இன்பம்) ஆகும். இதை அதன் ஸ்வரூப-லக்ஷணம் என்று கூறுகிறோம். இது மாயையின் விளைவுகளில்லாத, மாயையின் சாயலில்லாத தூய நிலை.

நீரிலே தோன்றும் குமிழிகள் நீரையன்றி வேறல்ல. நீரே தான் குமிழிகளாகத் தோன்றுகின்றது. வடிவத்திலும் பெயரிலும் ஏதோ தனியாக இருப்பதுபோல இக்குமிழிகள் காட்சியளிக்கின்றனவே தவிர, இருப்பதென்னவோ நீர் தான்.

## 9. எல்லாம் மெய்ப்பொருளில் கற்பிக்கப் பட்டவை.

ஸத்-சித்-ஆத்மனி அனுஸ்யூதே நித்யே விஷ்ணௌ
ப்ரகல்பிதா:
வ்யக்தயோ விவிதாஸ் ஸர்வா ஹாடகே கடகாதிவத்

ஸத்-உள்ளதாகவும், சித்-அறிவாகவும், ஆத்மனி-மெய்ப்பொருளாகவும், அனுஸ்யூதே-தொடர்ந்து இருப்பதாகவும், நித்யே - என்று முள்ள, விஷ்ணௌ-விஷ்ணுவினிடத்தில், விவிதா:- பலவகையான,

ஸர்வா:- எல்லா, வ்யக்தய:- பொருள்களும், ப்ரகல்பிதா:- கற்பிக்கப் பட்டிருக்கின்றன, ஹாடக-தங்கத்தில், கடக-வளையல், ஆதி-முதலியவை, வத்-போல.

ஸத்தாகவும் சித்தாகவும் மெய்ப்பொருளாகவும் என்று முள்ள விஷ்ணுவினிடத்தில் பலவகையான பொருள்களும் தோன்றுகின்றன, தங்கத்தில் வளையல் முதலியவை போல.

இங்கு விஷ்ணு என்ற சொல் "எங்கும் நிறைந்தது" என்ற பொருளில் பரம்பொருளைக் குறிக்கும். தங்கம் எத்தனை நகைகளாகச் செய்யப்பட்டாலும், வடிவமும் பெயரும் தான் மாறுபடுமே தவிர, இருப்பதென்னவோ தங்கம் ஒன்று தான். சாந்தோக்கிய உபநிஷத்தில், இந்த உதாரணத்தைக் கொண்டுதான், உத்தாலகர் சுவேதகேது விற்கு "உலகம் என்பது பெயரளவில் தான் உள்ளது" என்று விளக்குகின்றார். வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் என்பது உபநிஷத் வாக்கு.

## 10. குறைகளுக்குக் காரணம் தடைகள்

யதா ஆகாசோ ஹ்ருஷீகேச:
நாநா-உபாதி-கதோ விபு:
தத்-பேதாத் பின்னவத் பாதி
தந்நாசே கேவலோ பவேத்.

ஆகாச:- ஆகாயம், யதா-எப்படியோ அதுபோல, விபு:- எங்கும் நிறைந்த, ஹ்ருஷீகேச:- (புலன்களை ஆளும்) இறைவன், நாநா - பல, உபாதி-தடைகள் உடன், கத:- கூடி, தத்-அந்த, உபாதி-தடைகளின், பேதாத்-வேற்றுமையினால், பின்ன-வேறுபட்டது, வத் - போல, பாதி-தோன்றுகிறான். தத்-அந்த(உபாதி), நாசே - அழிந்த பொழுது. கேவல:- தான் மட்டும், பவேத் - இருக்கிறான்.

**ஆகாயத்தைப் போல, எங்கும் நிறைந்த இறைவன் வெவ்வேறான இடங்களுக்கு ஏற்பக் குறைந்து அந்த வேற்றுமைகளினால் தான் வேற்றுமைகளுடையவன் போலத் தோன்றுகின்றான். அந்தக் குறைவுகள் அழியும் பொழுது, தான் மட்டும் மிஞ்சி நிற்கிறான்.**

ஹ்ருஷீகேசன் என்றால் புலன்களை அடக்கி ஆள்பவன் என்று பொருள். இது விஷ்ணுவிற்கு ஒரு பெயர்.

ஒரே ஆகாயம் ஒரு குடத்தில் அடைபடும்பொழுது குட வடிவமாகிறது. ஓர் அறையில் நான்கு சுவர்களிடையே அடங்கும் பொழுது, அறையின் வடிவம் கொள்கிறது. குடத்தையும் உடைத்து, சுவர்களையும் இடித்து விட்டால், குடத்திலிருக்கும் ஆகாயமும் அறைக்குள்ளிருக்கும் ஆகாயமும் ஒரே ஆகாயமாகி விடும். குடம், சுவர்கள் என்ற தடைகளினால் தனித்தனியாகத் தோன்றிய ஆகாயம் உண்மையில் ஒன்றுதான். இதைப் போல, உடல் தோறும், உயிர் தோறும், உலகத்துப் பொருள் தோறும் தடைபட்டுத் தனித்தனியாக "நான்" "நீ" "அது" என்று வேறுபட்டுக் காணும் மெய்ப்பொருள், இந்தத் தடைகள் நீங்கி விட்ட பொழுது வேற்றுமையில்லாமல் ஒன்றாக எஞ்சி நிற்கும்.

## 11. பெயரும் சாதியும் தடைகளினால் உண்டானவை

நாநா-உபாதி-வசாத் ஏவ
ஜாதி-நாம-ஆச்ரமாதய:
ஆத்மனி ஆரோபிதாஸ்-தோயே
ரஸ-வர்ணாதி-பேதவத்

*ஜாதி-இனம், நாம-பெயர், ஆச்ரம-வாழ்க்கை நிலை, ஆதய:-முதலியவை, நாநா-பல, உபாதி-தடைகளின், வசாத்-காரணத்தினாலே, ஏவ-தான்*

ஆத்மனி - மெய்ப்பொருளிடத்தில், ஆரோபிதா: கற்பிக்கப்பட்டிருக்கின்றன, தோயே-நீரில், ரஸ-சுவை, வர்ண-நிற, பேத-வேற்றுமைகள், வத்-போல.

இனம், பெயர், வாழ்க்கை நிலைகள் முதலியன, பலவேறான தடைகளினால்தான் மெய்ப்பொருளிடத்தில் கற்பிக்கப்பட்டிருக்கின்றன, நீரில் சுவை, நிறம் போன்ற குணங்களைப் போல.

இனவேறுபாடுகள், அதற்கேற்ற பெயர்கள் எல்லாம், உண்மை ஒன்றாயிருக்கும் பான்மை தெரியாததனால் உண்டான வேற்றுமைகளாகும். எல்லா உயிரும் எல்லா உலகமும் ஓரினம்; ஒரு குலம். அத்தனையும் தெய்வம்.

தூய நீருக்குச் சுவை கிடையாது; நிறம் கிடையாது இவை இருந்தால் அது அசுத்த நீர் என்று கண்டு கொள்ள வேண்டும். நீருக்கு வேறான பொருள்கள் நீருடன் கலக்கும் பொழுது இவை உண்டாகின்றன. நீர் மட்டும் கலப்பில்லாமல் காக்கப்படுமானால், அதில் சுவையும் நிறமும் இருக்காது.

இதுபோல, இனவேற்றுமைகளும் சாதிப்பிரிவினைகளும் தூய பரம்பொருளின் இயல்புக்கு முற்றிலும் புறம்பானவை. அதைச் சேர்ந்தவை அல்ல.

## 12. ஸ்தூல சரீரம்

பஞ்சீக்ருத-மஹாபூத-ஸம்பவம் கர்ம-ஸஞ்சிதம்
சரீரம் ஸுக-துக்காநும் போக-ஆயதனம் உச்யதே

பஞ்சீக்ருத - ஐவகையாகக் கலவை செய்யப்பட்ட, மஹாபூத- (ஐந்து) மூலப்பொருள்களினின்றும், ஸம்பவம்-உண்டாகியதும், கர்ம-

வினைகளினும் வந்ததும்-பெறப்பட்டதுமான, சரீரம்-உடம்பு, ஸுக-இன்ப, துக்கானாம்-துன்ப, போக-நுகர்வுக்கு, ஆயதனம்-இருப்பிடமாக, உச்யதே-சொல்லப்படுகிறது.

**ஐவகையாகக் கலவை செய்யப்பட்ட ஐம்மூலப் பொருள்களினின்றும் உண்டானதும், வினைப்பயனும் பெறப்பட்டதுமான உடம்பு, இன்ப துன்பங்களின் நுகர்வுக்கிடமாகச் சொல்லப்படுகிறது.**

ஆகாயம், காற்று, தீ, நீர், நெருப்பு என்பவை ஐந்து மூலப்பொருள்கள் (மஹா பூதங்கள்) எனப்படும். இவற்றின் ஐவகைக் கலவை (பஞ்சீகரணம்) நிகழும் முறை பின்வருமாறு:—

ஒவ்வொரு மூலப்பொருளையும் முதலில் இறைவன் இரண்டாகப் பிரிக்கின்றான். ஒரு பாதியை அப்படியே இருத்திக்கொண்டு, மற்றொரு பாதியை நான்கு சம பகுதிகளாகப் பிரித்து, அந்நான்கில் ஒவ்வொரு பகுதியையும் மற்ற மூலப்பொருள்களோடு கலக்கின்றான். உதாரணமாக, ஆகாயத்தை இரண்டு பாதிகளாகப் பிரித்து, அதில் ஒரு பாதியை மறுபடியும் நான்கு சமபகுதிகளாகப் பிரித்து, அந்நான்கு பகுதிகளில் ஒவ்வொன்றையும் காற்று, தீ, நீர், மண் இவற்றோடு கலந்து விடுகின்றான். காற்றை, தீயை, நீரை, மண்ணை முறையே பிரித்து மற்றவற்றோடு கலக்கிறான்.

இம்முறையில் ஒவ்வொரு மூலப் பொருள்களிலும் அதன் சொந்தப் பகுதி பாதியும், மற்ற ஒவ்வொரு மூலப் பொருளின் அரைக்கால் பகுதியும் கலந்திருக்கும் இவ்விதக் கலவையினால் உலகத்தை அவன் படைக்கிறான்.

நமது உடலும் ஐம்மூலப்பொருள்களால் ஆனது. அது மட்டுமல்ல. அவரவரது கடந்தகால வினைகளும்

பிராணன் மேல் நோக்கிச் செல்வது; நாசியின் நுனியில் உறைவது. அபானன் கீழ்நோக்கிச் செல்வது; கழிவுக் கருவிகளில் உறைவது. வ்யானன் எல்லாப்பக்கங்களிலும் செல்வது; உடலெங்கும் பரவியிருப்பது. உதானன் உயிர் பிரிய உதவிசெய்து மேல்நோக்கிச் செல்வது; தொண்டையில் உறைவது. ஸமானன் உணவை ஜீரணித்து, உடலின் நடுவில் உறைவது. நாகன், கூர்மன், க்ருகலன், தேவதத்தன், தனஞ்சயன் என்று இன்னும் ஐந்து உயிர்க்காற்றுக்களும் இருப்பதாகக் கூறுவதுண்டு. இவை முறையே வாந்தி, இமைத்தல், பசி, கொட்டாவி, உடல் வளர்ச்சி இவற்றிற்கு உதவுகின்றன. மனம் என்பது சிந்திக்கும் அறிவைக் குறிக்கும். புத்தி என்பது முடிவெடுக்கும் அறிவைக் குறிக்கும்.

மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன ஐந்து அறிவுக் கருவிகள். இவை ஞான இந்திரியங்கள் எனப்படும். ஆகாயம் முதலியவற்றிலுள்ள ஸத்வகுணத்திலிருந்து இவை ஏற்படுகின்றன. நாக்கு, கை, கால், மலத்துவாரம், சிற்றின்ப உறுப்பு இவை செயற்கருவிகள். இவை கர்மேந்திரியங்கள் எனப்படும். இவை ஆகாயம் முதலியவற்றின் ரஜோகுணப் பகுதியிலிருந்து ஏற்படுகின்றன.

இந்தப் பதினேழும் சேர்ந்தது **ஸூக்ஷ்ம சரீரம்**. ஐந்து மூலப்பொருள்களின் கலவையால் இந்தப் பதினேழும் பெறப்படவில்லை. ஆகையால், இவை நுட்பமான ஆற்றல்கள், **தன்மாத்திரைகள்** எனப்படும். ஐந்து உயிர்க் காற்றுக்களும் உயிர்ப்புச் சக்திகள்; மனமும் புத்தியும் அறிவுச் சக்திகள்; புலன்கள் ஐந்தும் உணர்வுச் சக்திகள்; செயற்கருவிகள் ஐந்தும் இயக்கச்சக்திகள்.

## 14. காரண சரீரம்

**அனாதி-அவித்யா அநிர்வாச்யா**
**காரணோபாதி: உச்யதே**
**உபாதி-த்ரிதயாத் அன்யம்**
**ஆத்மானம் அவதாரயேத்**

*அனாதி-தொடக்கமில்லாத, அநிர்வாச்யா-(மெய்யோ பொய்யோ என்று) நிர்ணயிக்க முடியாததுமான, அவித்யா-அவித்யை, காரண உபாதி-காரண சரீரம் என்று, உச்யதே-சொல்லப்படுகின்றது. உபாதி-த்ரிதயாத் (ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரம் என்ற) மூன்று தடைகளிலிருந்தும், அன்யம்-வேறுபட்டதாக, ஆத்மானம்-மெய்ப்பொருளை, அவதாரயேத்-உறுதியாக அறிக.*

**எப்பொழுது தொடங்கியது என்று சொல்ல முடியாததும், மெய்யோ பொய்யோ என்று விண்டு சொல்லமுடியாததுமான அவித்யா-மாயை, காரண-உடலாகச் சொல்லப்படுகிறது. இந்த மூன்று உடல்களுக்கும் வேறானதாக மெய்ப் பொருளை உணர்ந்து கொள்க.**

இதற்கு முன், பருவுடல் (ஸ்தூல சரீரம்), கருவுடல் (ஸூக்ஷ்ம-சரீரம்) இரண்டும் சொல்லப்பட்டன. இப்பொழுது காரணஉடல் (காரண-சரீரம்) சொல்லப்படுகிறது. எல்லாத் தோற்ற வேற்றுமைகளுக்கும் கருவூலமான மூல காரணமாக இருப்பதால், அவித்யா-மாயை காரண சரீரமாகச் சொல்லப் படுகிறது. இது மெய்யோ பொய்யோ என்று விண்டு சொல்லமுடியாத மர்மமாக இருக்கின்றது. இது மெய்யாக இருக்கமுடியாது. ஏனெனில், மெய்யறிவு தோன்றும் பொழுது இது அழிந்து விடுகிறது. இதை முழுப்பொய், இல்பொருள் என்று சொல்லி ஒதுக்கவும் முடியவில்லை. ஏனெனில் இது வேற்றுமைகளைத் தோற்றுவிக்கிறது; உண்மையை மறைக்கவும் செய்கிறது. இல்பொருளாக

இருந்தால் தோற்றமே இருக்காது. முயல் கொம்பு, ஆகாயத்தாமரை, மலடிமகன், சதுர வட்டம், மணமான பிரம்மச்சாரி என்பதெல்லாம் இல்பொருள்கள். உண்மையாகவோ பொய்யாகவோ இவற்றிற்குத் தோற்றமே கிடையாது. அவித்யா-மாயையோ ஏதோ ஒரு வகையில் உலகமாகத் தோன்றுகிறது.

இக்காரணங்களால், அது பரம்பொருளைப் போல என்றுமுள்ள மெய்யுமன்று; இல்பொருள்களைப் போல என்றுமேயில்லாத பொய்யுமன்று. பொய்யும் மெய்யும் கலந்ததாக இருக்கட்டுமே என்ருல், மெய்யோடு பொய் ஒரு பொழுதும் சேர்ந்திருக்க முடியாது; அவை ஒன்றுக்கொன்று முரணுனவை.

எனவே அவித்யா—மாயை என்பது விண்டுரைக்க முடியாத (அநிர்வசனீயமான) மர்மமாக, புதிராக இருக்கின்றது. இதைக் காரணமாகக் கொண்டு ஏற்பட்டுள்ள எல்லா உலகங்களும், உலகத்துப் பொருள்களும், பெயர்களும் வடிவங்களும், "நான்" "நீ" "அது" என்று பலவாக விரிந்து காணும் எல்லாம் இத்தகைய அநிர்வசனீயமான புதிர்தான்; பிரமைதான். மெய்யறிவு தோன்றும் பொழுது இந்த அவித்யாமாயையும் தன்னுல் தோற்றுவிக்கப்பட்ட அத்தனை வேற்றுமைகளோடும் மாயும். புதிர்களும் மர்மங்களும் உண்மை தெரியும் வரைதான் கொட்டமடிக்கும்; கும்மாளம் போடும். உண்மையின் ஒளிபட்டதும் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிடும்.

"மெய்ப் பொருளாகிய நான், இதுவரை இந்தப் பருவுடலை, கருவுடலை, காரணவுடலையே நான் என்று எண்ணி மயங்கியிருந்தேன். இது தவறு. இந்த மூவுடல்களும் நான் அல்ல. அவற்றினின்றும் வேறுபட்ட

அழிவில்லாத உண்மையே நான்" என்று ஒவ்வொருவரும் உணர வேண்டும்.

## 15. ஐந்து கோசங்கள்

**பஞ்ச-கோசாதி-யோகேனதத்தன்மய இவ ஸ்த்தித:**
**சுத்தாத்மா நீல வஸ்த்ராதி-யோகேன ஸ்படிகோ யதா**

*சுத்த-தூய, ஆத்மா-மெய்ப்பொருள், பஞ்ச-ஐந்து, கோச-கோசங்களின், யோகேன-சேர்க்கையினுல் தத்தன்மய-அதனதன் தன்மையதானது, இவ-போல, ஸ்த்தித:- நிற்கிறது, யதா-எப்படி, ஸ்படிக:- படிகம், நீல-நீலவண்ண, வஸ்த்ர-ஆடை, ஆதி-முதலியவற்றின், யோகேன-சேர்க்கையால் (நீலவண்ணமாகக் காண்கிறதோ அது போல.)*

**தூய மெய்ப்பொருள் ஐந்து கோசங்களின் (உறைகளின்) சேர்க்கையால் அதனதன் தன்மையதானதுபோல நிற்கிறது, நீலஆடை முதலியவற்றின் சேர்க்கையால் ஸ்படிகம் (நீலம் முதலியவையாகத் தெரிவது) போல.**

நம்முடைய பருவுடல் **அன்னமய கோசம்** எனப்படும். உணவினுல் அமைந்திருப்பதால் இது அன்னமய கோசம் எனப்படும். பிறப்பும் இறப்பும் இந்தக் கோசத்துக்குத் தான். **ஸ்தூல சரீரம்** என்றும் இது முன்னர்க் குறிப்பிடப் பட்டது.

ஐந்து உயிர் மூச்சுக்களும் ஐந்து செயற்கருவிகளும் அடங்கியது **பிராணமய கோசம்** எனப்படும். பசியும் தாகமும் இந்தக் கோசத்திற்கு ஏற்படுகின்றன. இது செயல்திறன் அல்லது கிரியா சக்தி படைத்தது. ஐந்து அறிவுக் கருவிகளுடன் சேர்ந்த மனத்தால் ஆனது **மனேமய**

**கோசம்.** இதற்குத்தான் இன்பதுன்பங்கள் ஏற்படுகின்றன. இது அவாவும் திறன் அல்லது இச்சா சக்தி படைத்தது.

**விஞ்ஞானமய கோசம்** என்பது அறிவுக் கருவிகள் ஐந்துடன் கூடிய புத்தியாகும், இது அறியும் திறன் அல்லது ஞான சக்தி படைத்ததாகும். இதுவே ஜீவன் என்றும் அழைக்கப்படுகின்றது.

பிராண, மன, விஞ்ஞான மய கோசங்கள் மூன்றும் சேர்ந்து கருவுடல் அல்லது ஸூக்ஷ்ம சரீரம் எனப்படுகின்றன.

**ஆனந்தமய கோசம்** என்பது காரண சரீரம் எனப்படும். இது அவித்யை என்றும் முன்னர்க் கூறப்பட்டது. இது ஆனந்தத்தை வெளிப்படுத்துகின்ற நிலை. ஏனெனில் இங்கு வேற்றுமைகள் தோன்றுவதில்லை. இதற்குரிய உணர்வு நிலை தூக்கம். தூக்கத்தில் நாம் ஒன்றையும் அறிவதில்லை. இதனால் ஏற்படும் உணர்வு இன்பம். ஆனால் தூக்கத்தில் பன்மை தெரியவில்லை என்றாலும் உண்மையும் தெரியவில்லை. அதனால் தூக்கம் முக்தியாகாது.

கத்தியைப் போடும் உறைபோல், மெய்ப்பொருளை இந்த ஐந்து கோசங்களும் ஒன்றன் மேல் ஒன்றாக மூடியிருக்கின்றன. எல்லாவற்றுக்கும் வெளியிலிருப்பது அன்னமய கோசம். எல்லாவற்றுக்கும் உள்ளிருப்பது ஆனந்த மய கோசம். அதற்குள் இருப்பது ஆனந்தமே வடிவமான பரம்பொருள். நாம் இந்த ஐந்து கோசங்களை நன்கு ஆராய்ந்து நம்மைப் பற்றிய உண்மையை அறிய வேண்டும். இப்படி ஆராய்வதற்குப் **பஞ்ச கோச விசாரம்** என்று பெயர். இது **தைத்திரீய உபநிஷத்தில்** சிறப்பாகக் கூறப்படுகின்றது.

ஸ்படிகத்திற்குத் தனியான நிறம் கிடையாது. ஏதேனும் ஒரு நிறம் உள்ள பொருள் அதன் அருகில் இருந்தால் நிறத்தைப் அந்த படிகம் பிரதிபலித்து, அந்த நிறத்தைத் தானே பெற்று விட்டது போல் காட்சியளிக்கும். படிகம் போன்ற தூய மெய்ப்பொருள் கோசங்களின் தன்மையை தானே அடைந்து விட்டது போல் தோன்று கிறது. உடலாகவும் உயிர் மூச்சாகவும், மனதாகவும் புத்தியாகவும் இன்பமாகவும் அதனதன் இயல்புகளோடு சேர்ந்ததாகக் காணுகிறது. ஆனால் உண்மையில் மெய்ப் பொருளில் எந்த வகையான மாற்றமும் ஏற்படுவதில்லை.

## 16. பகுத்தறிவு

**வபுஸ்·துஷாதிபி: கோசை:**
**யுக்தம் யுக்தி - அவகாதத:**
**ஆத்மானம் ஆந்தரம் சுத்தம்**
**விவிச்யாத் தண்டுலம் யதா**

*வபு-உடல் என்ற, துஷ-உமி, ஆதிபி:-முதலிய, கோசை:-கோசங் களுடன், யுக்தம்-கூடிய, ஆத்மானம்-மெய்ப்பொருளை, யுக்தி-ஆராய்ச்சி யினால், அவகாதத:-இடித்து, ஆந்தரம்-உள்ளிருக்கும், சுத்தம்-தூய தத்துவமாக, விவிச்யாத்-பிரித்து அறியவேண்டும், யதா-எப்படி, தண்டுலம்-அரிசியை (குத்தி உமியிலிருந்து பிரிக்கிறார்களோ அது போல).*

*அன்னமயகோசம் (உடல்) முதலிய உமியோடு சேர்ந்த மெய்ப்பொருளை ஆராய்ச்சி என்னும் (உரலிலிட்டு) இடித்து, உள்ளுறை தூய தத்துவமாக பிரித்து அறியவேண்டும், [நெல்லைக்குத்தி] அரிசி [எடுப்பது] போல.*

நெல்லைக்குத்தி உமி வேறு அரிசி வேறாகப் பிரித்து எடுத்து உணவாக்கிக் கொள்வது போலே, கோசங்களை

யெல்லாம் நீக்கி உள்ளிருக்கும் மெய்ப்பொருளை உணர வேண்டும்.

## 17. மெய்ப்பொருள் அறிவிலேதான் தோன்றுகிறது

ஸதா ஸர்வகதோபி ஆத்மா
ந ஸர்வத்ர அவபாஸதே
புத்தௌ ஏவ அவபாஸேத
ஸ்வச்சேஷு பிரதிபிம்பவத்

*ஸதா-எப்பொழுதும், ஸர்வ-எங்கும், கத:-இருப்பதாக, அபி-இருந்தாலும், ஆத்மா-மெய்ப்பொருள், ஸர்வத்ர-எங்கும், அவபாஸதே-விளங்குகிறது, ந - இல்லை, புத்தௌ - புத்தியில், ஏவ - தான், அவபாஸேத-விளங்குகின்றது. ஸ்வச்சேஷு-தூய (கண்ணாடி) முதலியவற்றுள், பிரதிபிம்ப-பிரதிபிம்பம், வத்-போல.*

**எப்பொழுதும் எங்கும் மெய்ப்பொருள் இருந்தாலும், எல்லா இடத்திலும் தெரிவதில்லை; புத்தியில் மட்டும்தான் தெரிகிறது, தூய (கண்ணாடி) முதலியவற்றில் பிரதிபிம்பம் (தெரிவது) போல.**

எல்லா இடத்திலும் மெய்ப்பொருள் இருந்தாலும், அறிவில்தான் அது தோன்றுகின்றது. ஏனெனில் அறிவிற்கு அதைப் பிரதிபலிக்கும் திறன் இருக்கிறது. கண்ணாடியும் நீரும் கல்லும் சமமான ஜடப் பொருள்களென்றாலும், கண்ணாடியிலும், ஜலத்திலும் நம் முகம் தெரிகிறது; கல்லில் தெரிவதில்லை.

ஸத், சித், ஆனந்தம் என்பது மெய்ப்பொருளின் தன்மை. இதில் ஸத் அல்லது "இருக்கின்றது" என்ற தன்மை எல்லாப் பொருள்களுக்கும் பொது. சித் அல்லது அறிவு

எல்லாப் பொருளிடத்தும் தோன்றவில்லை. உயிரினங்களிடம் தான் காணப்படுகிறது. ஆனந்தமோ உயிரினங்களிலும் எப்போதாவதுதான் வெளிப்படுகின்றது.

## 18. மெய்ப்பொருள் மற்றப்பொருள்களினின்றும் வேறுபட்டது.

**தேஹ-இந்த்ரிய-மனோ-புத்தி —**
**ப்ரகிருதிப்யோ விலக்ஷணம்**
**தத்-வ்ருத்தி-ஸாக்ஷிணம் வித்யாத்**
**ஆத்மானம் ராஜவத் ஸதா**

*தேஹ-உடல், இந்த்ரிய-புலன், மன-மனம், புத்தி-புத்தி, ப்ரக்ருதிப்ய:- பிரகிருதி இவற்றினின்றும், விலக்ஷணம் வேறானதாகவும், தத்-அவற்றின், வ்ருத்தி-செயல்களுக்கு, ஸதா-எப்பொழுதும், ஸாக்ஷிணம்-சாக்ஷியாகவும், ஆத்மானம் - மெய்ப்பொருளை, வித்யாத்- அறிவாயாக, ராஜவத்- ஓர் அரசனைப் போல.*

**உடல், புலன்கள், மனம், புத்தி, இயற்கை இவற்றிலிருந்து வேறுபட்டதாகவும் அவற்றின் செயல்களுக்கு எப்பொழுதும் சாக்ஷியாகவும், ஓர் அரசனைப் போன்றதாக, மெய்ப்பொருளை அறிவாயாக.**

உடலும் புலன்களும் விழிப்பு நிலையில்தான் செயற்படுகின்றன; கனவு நிலையில் அவை செயற்படுவதில்லை. அங்கு மனம் மட்டும் செயல்படுகின்றது. ஆழ்ந்த தூக்கத்தில் மனத்தின் செயலும் ஒடுங்கிவிடுகின்றது. இவ்வாறு இவை செயற்படுவதையும் ஒடுங்குவதையும் ஒருங்கே சாக்ஷியாக நின்று உணர்வது மெய்ப்பொருளாகும். மற்ற எல்லாம் மாறினும் அது தான் மாறாமல் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருக்கிறது; எல்லா உணர்வு

நிலைகளிலும் உணர்வாக நிற்கின்றது. குழந்தைப் பருவம், இளமைப் பருவம், முதுமைப் பருவம் எல்லாவற்றிலும் தான் மாருமல் இருப்பதை ஒரு மனிதன் உணர்வது போல், எல்லா அநுபவ நிலைகளிலும் ஒரே அறிவு அவற்றிற்குச் சாக்ஷியாக இருக்கிறது.

சாக்ஷி என்ருல் நடுநிலை வகிப்பவன் என்பது பொருள். ஓர் அரசன், தான் ஓரிடத்தில் இருந்து கொண்டே எல்லாரிடமும் வேலை வாங்குவது போலவோ, ஓர் அரசன் இருக்கிருன் என்ற பயத்திலேயே எல்லோரும் தத்தம் தொழிலைச் செய்வது போலவோ, சாக்ஷியான மெய்ப்பொருள் ஒன்று உடல், புலன், மனம், புத்தி, இயற்கை என்ற எல்லாப்பொருள்களையும் இயக்குகின்றது. மெய்ப்பொருளின் ஆணையால் சூரியனும் சந்திரனும், காற்றும் அக்கினியும் தருமதேவதையும் தத்தம் நிலைகளில் நின்று தொழில் செய்கின்றன என்பது தைத்திரீய உபநிஷத்தும், பிருஹ தாரண்யக உபநிஷத்தும் அறிவிக்கின்ற செய்தியாகும். சூரிய சந்திரர்களிடத்துக் காணப்படும் ஒளியும் மெய்ப் பொருளி லிருந்து பெற்ற ஒளியாகும் என்று பகவத் கீதையும் பேசுகின் றது. மெய்ப்பொருளின் சந்நிதியிலே, எல்லாம் ஒழுங்காக நியதிப்படி இயங்குகின்றன.

## 19. மெய்ப்பொருளுக்கு செய்யவேண்டியது ஒன்றுமில்லை.

வ்யாப்ருதேஷு இந்த்ரியேஷு
வ்யாபாரி இவ அவிவேகிநும்
த்ருச்யதே அப்ரேஷு தாவத்ஸு
தாவன்னிவ யதா சசீ

வ்யாப்ருதேஷு - இயங்குகின்ற, இந்த்ரியேஷு - புலன்களில், வ்யாபாரி - இயங்குகின்றவன், இவ - போல, அவிவேகிநும் - பகுத்தறிவில்

*லாதவனுக்கு, த்ருச்யதே-காணப்படுகிறன், யதா-எப்படி, தாவத்ஸு - ஓடுகின்ற, அப்ரேஷு - மேகங்களில், சசீ - சந்த்ரன், தாவன் - ஓடுகின்றவன், இவ - போல, த்ருச்யதே - காணப்படுகிறனே அதுபோல.*

**ஆராய்ந்து அறியாதவர்களுக்கு, வேலை செய்கின்ற புலன்களோடு மெய்ப்பொருளும் வேலை செய்வதாகக் காணப்படுகின்றது. மேகங்கள் ஓடும் பொழுது சந்திரன் ஒடுவது போலத் (தோன்றுகிறதல்லவா)?**

செயல்படுவதென்னவோ புலன்களும், மனதும், புத்தியும், இயற்கை உலகமும் தான். அதாவது, மாயைதான் தொழிற்படுகிறது. ஆனால் மெய்ப்பொருள் சும்மா இருந்தாலும் தொழிற்படுவதாகக் காண்கிறது. இது விபரீதப் பார்வை. மேகங்கள்தான் ஓடுகின்றன; ஆனால் சந்திரன் ஓடுவது போலத்தான் பார்த்தவுடன் யாருக்கும் தோன்றும், சற்று நிதானித்து உற்று நோக்கினல், சந்திரன் நிலையாக நிற்பது தெரிய வரும். இது போலத் தான், சூரியன் உதிக்கிறன் என்று சொல்கிறேம். உண்மையில் நகர்ந்து கொண்டிருப்பது நம் பூமியே தவிர சூரியனன்று. நம் பார்வைக்குச் சூரியன் வந்தவுடன் "சூரியன் உதித்து விட்டான்" என்கிறேம். பார்வையிலிருந்து மறைந்தவுடன் "அஸ்தமித்து விட்டான்" என்கிறேம்.

எதுவுமே இப்படித் தலைகீழ்ப் பார்வையாக இருக்கிறது. சும்மா இருக்கும் மெய்ப்பொருளையும் இப்படித்தான் மாருக எண்ணி விடுகிறேம்.

## 20. மெய்ப்பொருளால் மற்ற யாவும் செயற்படுகின்றன.

ஆத்ம-சைதன்யம் ஆச்ரித்ய
தேஹேந்த்ரிய-மனோ தியஃ
ஸ்வகீயார்த்தேஷு வர்த்தந்தே
ஸூர்யாலோகம் யதா ஜனா:

தேஹ-உடல், இந்த்ரிய-புலன், மன - மனம், தியः- புத்தி முதலியவைகள், ஆத்ம - மெய்ப்பொருள் என்னும், சைதன்யம் - பேரறிவினை, ஆச்ரித்ய-சார்ந்து, ஸ்வகீய-தந்தம், அர்த்தேஷு-பொருள்களைக் குறித்து வர்த்தந்தே - தொழிற்படுகின்றன, யதா - எப்படி, ஜனா:- மக்கள், ஸூர்ய-சூரியனுடைய, ஆலோகம் - ஒளியினால் (தொழில் செய்கிறார்களோ அதுபோல).

**உடல், புலன்கள், மனம், புத்தி இவைகளெல்லாம் பேரறிவான மெய்ப்பொருளைச் சார்ந்து தந்தம் பொருள்களைக் குறித்துத் தொழிற்படுகின்றன. மனிதர்கள் சூரிய ஒளியின் (உதவி கொண்டு தொழில் செய்வது போல.)**

அறிவின் வடிவமான மெய்ப்பொருளைச் சார்ந்துதான் அறிவற்ற மற்ற எல்லாம் இயங்க முடியும். ஜடப்பொருளுக்கு இயங்கும் சக்தி கிடையாது. அறிவின் தூண்டுதலினாலோ, அதன் ஆட்சிக்குட்பட்டோதான் ஜடப்பொருள் தொழிற்படும். ஜட உலகமே சத்தியம், அது தானாகவே உண்டாகி இயங்குகின்றது என்ற உலகாயதக் கூற்று இங்கு மறுக்கப்படுகின்றது.

சூரிய வெளிச்சம் வந்தவுடனே அவரவர் தத்தம் கடமையினை ஆற்றத் தொடங்குகின்றனர். சூரிய ஒளி ஒரு பொதுவான சூழ்நிலையாக இருக்கின்றது. யார் யார் என்னென்ன கடமைகளைச் செய்யவேண்டும் என்பதைச் சூரிய ஒளி சொல்லவில்லை. என்றாலும், தொழில்படுவதற்கு அது பொதுக் காரணமாக இருக்கின்றது.

இதுபோல, மெய்ப்பொருள் என்ற அறிவொளியும் உடல், மனம் இவை இயங்குவதற்குப் பொதுக் காரணமாக இருக்கிறது; அவற்றின் இயங்கும் சக்தியாக அது விளங்குகிறது.

## 21. அறியாமையினால் விளைந்த கற்பனை

**தேஹ-இந்த்ரிய குணான் கர்மாணி**
**அமலே ஸத்-சித்-ஆத்மனி**
**அத்யஸ்யந்தி அவிவேகேன**
**ககனே நீலதாதி வத்**

*தேஹ-உடல், இந்த்ரிய, புலன் இவற்றின், குணான்-இயல்புகளையும், கர்மாணி - செயல்களையும், அமலே - தூயதும், ஸத்-உள்ளதும், சித்-அறிவும் ஆன, ஆத்மனி-மெய்ப்பொருளில், அவிவேகேன-பிரித்தறியாமையால், அத்யஸ்யந்தி - கற்பிக்கிறார்கள்; ககனே - ஆகாயத்தில், நீலத - நீலவண்ணம், ஆதி - முதலியவற்றை, வத்-போல.*

*என்றும் உள்ளதும் அறிவு வடிவமானதுமான மெய்ப்பொருளில் உடல், புலன்கள் இவற்றின் இயல்புகளையும் செயல்களையும் பாமரர்கள் பிரித்தறியும் சக்தியின்மையால் கற்பிக்கிறார்கள், ஆகாயத்தில் நீலம் முதலிய வண்ணங்களை (ஏற்றிப் பேசுவது) போல.*

ஆகாயம் தூய்மையானது. அதற்கு வண்ணமும் வடிவமும் கிடையாது. அத்தகைய ஆகாயத்தை நீல வண்ணமுடையதாகக் காண்கிறோம். கவிழ்க்கப்பட்ட கொப்பரைபோல் அது நமக்குத் தோன்றுகின்றது. இவ்வாறு ஆகாயத்திலில்லாத குணங்களை அதில் ஏற்றி வைக்கிறோம். இதுபோல, தூய்மையான, செயலொன்று மில்லாத மெய்ப்பொருளில் உடல், புலன்கள் முதலிய வற்றிற்குரிய குணங்களையும் செயல்களையும் ஏற்றிக் குழப்பிக் கொள்கிறோம். ஒன்றில் அதல்லாத மற்றொன்றின் இயல்புகளை ஏற்றிக் குழப்புவது **அத்யாஸம்** என்று கூறப் படும். இந்த **அத்யாஸம்**தான் எல்லாத் தீமைகளுக்கும் முதல் படி; இது அறியாமையில் (**அவித்யையில், அவிவேகத்தில்**) விளைவது.

உடல் அழிகிறது, பிறக்கிறது. ஆனால் உடலையும் நம்மையும் குழப்பிக்கொண்டு நாமே பிறந்து இறப்பதாக எண்ணிக் கொண்டிருக்கிறோம். காது கேட்காவிட்டால் "நான் செவிடு' என்கிறோம். உண்மையில் செவிடா யிருப்பது காதுதான், நாமல்ல. இதேபோல், இன்பமும் துன்பமும் மனத்திற்கு ஏற்படுகின்ற உணர்வுகள். ஆனால் மனத்தோடு நம்மை ஒன்றுபடுத்திக் கொண்டு "நான் இன்புறுகிறேன், துன்புறுகிறேன்" என்று சொல்லிக் கொள்கிறோம். துன்பத்தை அகற்றுவதற்கும் இன்பத்தைப் பெறுவதற்கும் ஓயாது உழைக்கிறோம்.

## 22. மனம் என்னும் தடை

அஞ்ஞானத் மானஸ உபாதே:
கர்த்ருத்வாதீனி ச ஆத்மனி
கல்ப்யந்தே அம்புகதே சந்த்ர
சலனாதி யதா அம்பஸ:

*மானஸ-மனமென்னும், உபாதே:- தடைப்பொருளைச் சேர்ந்த கர்த்ருத்வம்-செயல் செய்பவன் என்ற தன்மை, ஆதீனி-முதலியவற்றை, ஆத்மனி-மெய்ப்பொருளில், அஞ்ஞானத்-அறியாமையினால், கல்ப்யந்தே-கற்பிக்கிறார்கள், யதா-எப்படி, அம்பஸ:- தண்ணீரினுடைய, சலன-அசைவு, ஆதி-முதலியவற்றை, அம்பு-தண்ணீரில், கதே-தெரியும், சந்த்ரே- சந்திரனில் கற்பிக்கிறார்களோ அப்படி.*

மனம் என்னும் தடைப்பொருளைச் சேர்ந்த செயல் செய்பவன் என்ற தன்மை முதலியவை அறியாமை காரணமாக, மெய்ப்பொருளில் இருப்பதாகக் கற்பிக்கப்படுகின்றன; தண்ணீர் அசையும்பொழுது அதில் பிரதிபலிக்கும் சந்திரன் அசைகிறது (என்று எண்ணுவதைப்) போல.

செயலுக்குக் காரணம் மனம். "நான் செய்கிறேன்" என்ற உணர்வை அது உண்டுபண்ணுகிறது. மெய்ப்

பொருளுக்கு ஒரு செயலும் கிடையாது. நிறைந்த முழு அமைதி அது; அலையில்லாத ஆழ்கடல்.

ஆகாயத்தில் இருக்கிறது சந்திரன். அதன் பிரதி பிம்பம் தண்ணீரில் தெரிகிறது. தண்ணீர் அசையும் பொழுது பிரதிபிம்பம் அசையுமேயன்றி, ஆகாயத்திலுள்ள சந்திரன் அசைகிறது என்று எண்ணலாமா? அதுபோல, மனம் என்னும் தண்ணீரில் பிரதிபலிக்கும் மெய்ப் பொருள் என்னும் முழுநிலா, மனம் அசையும் பொழுதெல்லாம் தானும் அசைவதில்லை.

## 23. புத்தியின் செயல்கள்

ராக-இச்சா-ஸுக-துக்காதி
புத்தௌ ஸத்யாம் ப்ரவர்த்ததே
ஸுஷுப்தௌ நாஸ்தி தந்நாசே
தஸ்மாத் புத்தேஸ்து ந ஆத்மன:

*ராக - பற்று, இச்சா - விருப்பு, ஸுக - இன்பம், துக்க - துன்பம், ஆதி - முதலியவை, புத்தௌ - புத்தி, ஸத்யாம் - இருக்கும்பொழுது, ப்ரவர்த்ததே - உண்டாகின்றன, தத்-அது, ஸுஷுப்தௌ-தூக்கத்தில், நாசே - அழியும்பொழுது, நஅஸ்தி (அவை) இல்லை. தஸ்மாத் - ஆகையினால், புத்தே - புத்திக்குத்தான், அவை ஏற்படுகின்றன, ஆத்மன: - மெய்ப்பொருளுக்கு, ந - இல்லை.*

விருப்பு, வெறுப்பு, இன்ப துன்பம் முதலியவை யெல்லாம் புத்தி இருக்கும்பொழுது ஏற்படுகின்றன. ஆழ்ந்த தூக்கத்தில் அது ஒடுங்கிவிடும்பொழுது அவை ஏற்படுவதில்லை. ஆதலால் அவை புத்திக் குரியவை; மெய்ப் பொருளுக்கல்ல.

புத்தி செயல்படும்பொழுது விருப்பு வெறுப்பு, இன்ப துன்பங்கள் ஏற்படுகின்றன. புத்தி செயல்படாமல்

ஒடுங்கும்பொழுது அவை ஏற்படுவதில்லை. புத்தி இருந்தால் தாமும் இருந்து, அது ஒடுங்கும்பொழுது தாமும் ஒடுங்கினல், அவை புத்தியின் செயல்கள் என்றுதான் தெரிந்து கொள்ள வேண்டும். இதற்கு அந்வய-வ்யதிரேக அநுமானம் எனப் பெயர். அந்வயம் என்ருல், புத்தி இருக்கும் பொழுது விருப்பு, வெறுப்பு முதலியவையும் இருக்கின்ற ஒற்றுமை. வ்யதிரேகம் என்ருல், புத்தி ஒடுங்கும் பொழுது விருப்பு, வெறுப்பு முதலியவையும் இல்லாமற் போய் விடுகின்ற ஒற்றுமை. இந்த இரண்டு ஒற்றுமைகளினுல் ஊகிப்பது இந்த அனுமான முறை.

## 24. மெய்ப்பொருளின் இயற்கை

**ப்ரகாசோ அர்க்கஸ்ய தோயஸ்ய**
**சைத்யம் அக்னேர் யதா உஷ்ணதா**
**ஸ்வபாவ ஸத்-சித்-ஆனந்த**
**நித்ய நிர்மலதா ஆத்மன:**

*யதா - எப்படி, அர்க்கஸ்ய - சூரியனுக்கு, ப்ரகாச:- ஒளியும், தோயஸ்ய - நீருக்கு, சைத்யம் - குளிர்ச்சியும், அக்னே:- நெருப்பிற்கு, உஷ்ணதா - சூடும், (இயற்கையோ) அப்படி, ஆத்மன:- மெய்ப் பொருளுக்கு, ஸத்-இருப்பும், சித் - அறிவும், ஆனந்த - இன்பமும், நித்ய - என்றுமுள தன்மையும், நிர்மலதா-தூய்மையும், ஸ்வபாவ:- இயற்கையாகும்.*

சூரியனுக்கு ஒளியும், நீருக்குக் குளிர்ச்சியும், நெருப்புக்குச் சூடும் இயற்கையாயிருப்பதுபோல, இருத்தலும், அறிவும், இன்பமும், அழியாமையும் தூய்மையும் மெய்ப்பொருளின் இயற்கையாகும்.

சூரியனைக் கிரஹணம் பிடிக்கும்பொழுது அதன் ஒளி மழுங்குவதைப் பார்க்கிருேம். என்ருலும், அதன் ஒளி அதற்கு இயற்கையானது என்று நமக்குத் தெரியும். நீரைக்

காய்ச்சினால் சுடுகிறது. என்றாலும், சூடு நெருப்புடன் சேர்ந்ததால் வந்தது, நீருக்கு இயற்கை குளிர்ச்சிதான் என்று நமக்குத் தெரியும். ஒரு பொருளின் தன்மையை எதனாலும் மாற்ற முடியாது. அப்படி மாற்றினால் அது வேறு பொருளாகிவிடும். நெருப்பு நெருப்பாக இருந்து கொண்டே, சுடும் தன்மையை இழக்காது. இழந்தால் அது நெருப்பன்று.

இது போல, மெய்ப்பொருளின் மாறாத தன்மை ஸத்-சித்-ஆனந்தம் என்பது

நன்றாக ஆராய்ந்து பார்த்தால், நெருப்பென்றும் நீரென்றும் பலவகைத் தன்மைகளை உடைய பன்மை உலகம் முழுவதும் ஸத்-சித்-ஆனந்தம் என்பதைத் தவிர வேறன்று.

## 25. அறிகிறேன் என்று எண்ணுவது பகுத்தறிவின்மையால்

> ஆத்மனஸ்-ஸத்-சித்-அம்சஸ்-ச
> புத்தேர்-வ்ருத்தி: இதி த்வயம்
> ஸம்யோஜ்ய ச அவிவேகேன
> ஜாநாமி இதி ப்ரவர்த்ததே

ஆத்மன:- மெய்ப்பொருளின், ஸத்-இருப்பு, சித்-அறிவு என்ற, அம்ச:- இயல்புகள், புத்தே: - புத்தியின், வ்ருத்தி-தொழில். இதி-என்ற, த்வயம்ச - இரண்டையும், அவிவேகேன - பிரித்தறியாமையினால், ஸம்யோஜ்ய-கலந்து, ஜாநாமி-அறிகிறேன், இதி-என்று, ப்ரவர்த்ததே-செயல்படுகின்றான்.

மெய்ப்பொருளின் ஸத்-சித் என்ற இயல்பையும் புத்தியின் தொழிலையும் பகுத்தறிவின்மையின் காரணமாகக் கலந்து "நான் அறிகிறேன்" என்று செயல்படுகின்றான்.

அறிவு என்பது மெய்ப்பொருளின் தன்மையாகும். இது புத்தியில்கல் பிரதிபலிக்கும்பொழுது. புத்தி அறியுந்திறன் பெற்று, "நான்" என்ற தோற்றத்தை ஏற்படுத்தி இந்த இரண்டுடன் கலவையாக "நான் அறிகிறேன்" என்ற எண்ணத்தைத் தோற்றுவிக்கின்றது.

## 26. மெய்ப்பொருளும் புத்தியும்

ஆத்மனோ விக்ரியா நாஸ்தி
புத்தேர் போதோ ந ஜாது அபி
ஜீவஸ் ஸர்வமலம் ஞாத்வா
கர்த்தா த்ரஷ்டா இதி முஹ்யதி

ஆத்மன: - மெய்ப்பொருளுக்கு, விக்ரியா - மாற்றம், நஅஸ்தி - இல்லை. புத்தே:- புத்திக்கு, போதோ-அறிவானது, ஜாது-ஒரு பொழுதும், அபி - கூட, ந-கிடையாது. ஜீவ:- உயிர், ஸர்வம்அலம்- எல்லாவற்றையும் (தவறாக) அறிந்து, கர்த்தா - (நான்), செயல் செய்பவன், த்ரஷ்டா-பார்ப்பவன், இதி-என்றும், முஹ்யதி-ஏமாற்றிக் கொள்கிறது.

மெய்ப்பொருளுக்கு மாற்றமில்லை. புத்திக்கோ (அது ஜடமாதலால்) ஒருபொழுதும் அறியுந் திறன் கிடையாது. உயிர் எல்லாவற்றையும் தவறாகப் பார்த்து "நான் செய்பவன்" "நான் பார்ப்பவன்" என்று தன்னை ஏமாற்றிக்கொள் கிறது.

மெய்ப்பொருளுக்கு மாற்றம், செய்கை ஒன்றும் கிடையாது. புத்தி போன்ற மாயையின் வடிவங்களுக்கு அறிவுத் திறன் கிடையாது. இந்த இரண்டும் கலக்கும் பொழுது உயிர் அல்லது ஜீவ தத்துவம் பிறக்கிறது. இந்த உயிர்தான் காரியங்களைச் செய்து அதன் பயனாய் இன்ப துன்பங்களை அடைகிறது; உடல்களை எடுத்துப் பிறக்கிறது.

இந்த உயிர் விடுதலை பெறவேண்டுமானால், அது மாயையின் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளவேண்டும். தன்னைத்தான் உணர்ந்து, உடல், மனம், புத்தி இவற்றின் தன்மைகளோடு தன்னைப் பிணைத்துக் கொள்ளாமல் தனித்து நிற்கவேண்டும். முன்னர் சொன்ன அத்யாஸத்தைக் களையவேண்டும்.

## 27. அச்சத்திற்குக் காரணம் அறியாமை

ரஜ்ஜு-ஸர்ப்பவத்-ஆத்மானம்
ஜீவம் ஞாத்வா பயம் வஹேத்
ந அஹம ஜீவ: பராத்மா இதி
ஞாதஸ் - சேத் நிர்ப்பயோ பவேத்

*ரஜ்ஜுஸர்பவத் - கயிற்று அரவுபோல், ஆத்மானம் - மெய்ப் பொருளை, ஜீவம் - உயிராக, ஞாத்வா - எண்ணி, பயம் - அச்சத்தை, வஹேத் - அடைகிறான். அஹம் - நான், ஜீவ:- உயிர், ந - இல்லை, பரமாத்மா-பரம் பொருள் என்று, ஞாத:- அறியப்பட்டது, சேத்- என்றால், நிர்ப்பயோ-அச்சமில்லாமல், பவேத்-இருக்கிறான்.*

**கயிற்றைப் பாம்பு என்று எண்ணுவதைப் போல, தன்னைச் சிற்றுயிராக எண்ணிப் பயப்படுகிறான் மனிதன். ''நான் சிற்றுயிர் அல்லன்; நான் பரம்பொருள்'' என்று உணர்ந்து விட்டால், அச்சமின்றி இருக்கிறான்.**

கயிற்றைப் பாம்பாக எண்ணிப் பயப்படுபவன், சற்றே நெருங்கிப் பார்த்தால், பாம்பு அங்கு இல்லை, கிடப்பது கயிறுதான் என்று உணர்ந்தால், பயத்தை விட்டு விடுவான். பொய்யறிவு பயத்தை உண்டு பண்ணும்; மெய்யறிவு பயத்தைப் போக்கும்.

சாவைக் கண்டு அஞ்சுவதும், மறுபடி உடலின் வந்து பிறந்து அதனால் படும் துன்பத்தைக் கண்டு அஞ்சுவதும்,

உடலோடும் மனத்தோடும் நம்மைப் பிணைத்துக் கொண்ட பொய்யறிவினால் ஏற்படுகின்றன. மெய்யறிவினால் மரண பயமும் ஜனன பயமும் போய்விடும். உடல் இறக்கும் பொழுது தான் இறப்பதில்லை; தனக்குப் பிறப்புமில்லை என்று உணர்வது மெய்யறிவு. பசியும் பிணியும் மூப்பும் உடலுக்கே யன்றி தனக்கு இல்லை என்று உணர்வது மெய்யறிவு. இதனால் இவ்வாழ்விலேயே அமைதி பெறுவது கூடும். அதுவே ஜீவன் முக்தி.

## 28. மெய்ப்பொருளின் ஒளி

ஆத்மா அவபாஸயதி ஏகோ
புத்த்யாதீனி இந்த்ரியாண்யபி
தீபோ கடாதிவத் ஸ்வாத்மா
ஜடைஸ்-தை: நாவபாஸதே

புத்தி - புத்தி, ஆதீனி - முதலியவற்றையும், இந்த்ரியாணி - புலன்களையும், அபி-கூட, ஏகோ- ஒன்றான, ஆத்மா-மெய்ப் பொருள், அவபாஸயதி - விளக்குகிறது. கட - குடம், ஆதி - முதலியவற்றை, தீபம் - விளக்கு, வத் - (காண்பிப்பது) போல; ஸ்வாத்மா - தன் மெய்ப் பொருள், தை:- அந்த, ஜடை:- ஜடப்பொருள்களினால், அவபாஸதே- விளக்கப்பட, ந - இல்லை.

புத்தி முதலியவைகளையும் புலன்களையும்கூட மெய்ப்பொருள் ஒன்றே தோன்றச் செய்கிறது, பானை முதலியவற்றை விளக்கு காண்பிப்பது போல. ஜடப் பொருள்களான அவற்றால் மெய்ப்பொருள் விளக்கப்படவில்லை.

ஒளிர்விக்கும் ஆற்றல் அறிவின் வடிவமான மெய்ப் பொருளுக்கே உண்டு விளக்குத்தான் பொருள்களைக் காண்பிக்கின்றதே தவிர, பொருள்கள் விளக்கைக் காண்பிப்பதில்லை. ஏனென்றால், ஒளியின் இயற்கை அது.

விளக்கிற்கும் மெய்ப்பொருளுக்கும் ஒப்புமை காண்பிக்கப்பட்டது. ஆனால், விளக்கு பிறபொருள்களைக் காண்பிக்குமேயன்றி, தன்னைத்தானே உணராது. ஒளியும் ஜடப்பொருளாக இருப்பதே இதற்குக் காரணம். மெய்ப்பொருளோ என்றால் அறிவின் வடிவமானது. பிற பொருள்களை அறிவித்துத் தன்னையும் அறியும் தன்மையது.

அத்வைதக் கோட்பாட்டின்படி, புத்தி, மனம் இரண்டும் கூட ஜடப்பொருளகளேயாகும். ஆகவே அவை அறியப்படும் இனத்தைச் சேர்ந்தவை.

## 29. மெய்ப்பொருளின் தன்னொளி

ஸ்வபோதே ந அன்ய-போத-இச்சா
போதரூபதயா-ஆத்மன:
ந தீபஸ்ய அன்ய-தீப-இச்சா
யதா ஸ்வாத்ம-ப்ரகாசனே

ஆத்மன:-மெய்ப்பொருளுக்கு, போத - அறிவு, ரூபதயா - வடிவமாக இருத்தலால், ஸ்வபோதே - தன்னறிவிற்கு, அன்ய - வேறொரு அறிவின், இச்சா - தேவை, ந - இல்லை, யதா - எப்படி, தீபஸ்ய - ஒரு விளக்கிற்கு, ஸ்வாத்ம - தன்னை, ப்ரகாசனே - விளக்குவதில், அன்ய - வேறு, தீப-விளக்கின், இச்சா - தேவை, ந - இல்லையோ (அதுபோல).

மெய்ப்பொருள் அறிவு வடிவமாகவே இருப்பதால் தன்னைத் தானறிவதற்கு (தன்னைத் தவிர) இன்னொரு அறிவு தேவையில்லை, ஒரு விளக்கு தன்னைக் காண்பித்துக்கொள்ள இன்னொரு விளக்கை நாடுவதில்லை; அதுபோல.

மெய்ப்பொருள் சுயம்பிரகாசமானது; வேறொன்றையும் சாராது தன்னை அறிவித்துக் கொள்ளும் தன்னாற்றல்

படைத்தது. ஒளிவிளக்கு பிறபொருள்களைக் காண்பித்துத் தன்னையும் காண்பித்துக் கொள்ளும் ஒளி பெற்றதாயிருக்கிறது.

இங்கே நாம் கவனிக்கவேண்டியது என்னவென்றால், விளக்கை அறிவதற்கு விளக்குமட்டும் போதாது. விளக்கினால் காண்பிக்கப்படும் பொருள்களைத் தெரிந்து கொள்வதற்கு அப்பொருள்கள் மட்டும் இருந்தாலும் போதாது. அப்பொருள்களையும் விளக்கையும் அறிவதற்கு ஓர் அறிவு வேண்டும். சூரிய ஒளியினால் உலகம் தெரிகிறது என்றாலும், கண்ணொளியும் அறிவொளியும் இல்லாவிட்டால் சூரியன் இருந்தாலும் ஒன்றும் பயன் இல்லை. கண் குருடாக இருந்தாலும், அல்லது சூரியன் இல்லாமல் இருட்டாக இருந்தாலும், "இருட்டாக இருக்கிறது, ஒன்றும் தெரியவில்லை" என்று அறிவிப்பதற்கு ஓர் அறிவு வேண்டும். அவ்வறிவே மெய்ப்பொருள். அந்த அறிவை அறிவதற்கு மற்றோர் அறிவு வேண்டியதில்லை.

## 30. பொய்யைத்தள்ளி மெய்யை அறிதல்

**நிஷித்ய நிகில-உபாதீன்**
**நேதி நேதி இதி வாக்யத:**
**வித்யாத் ஐக்யம் மஹாவாக்யை:**
**ஜீவாத்ம-பரமாத்மனோ:**

*'ந' - அன்று, இதி - என்று, ந - அன்று, இதி - என்று, என்ற, வாக்யத:- உரையினால், நிகில - எல்லா, உபாதீன் - தடைகளையும், நிஷித்ய - நீக்கி, மகாவாக்யை:- மகாவாக்கியங்களினால், ஜீவாத்ம - உயிரினுடையவும், பரமாத்மனோ:- மெய்ப்பொருளினுடையவும், ஐக்யம்- ஒருமையை, வித்யாத் - உணரவேண்டும்.*

**"இதன்று, இதன்று" என்ற உபநிஷத்தின் உரையைப் பின்பற்றி எல்லாத் தடைகளையும் நீக்கி, உயிரும் பரம் பொருளும் ஒன்றே என்பதை மகா வாக்கியங்கள் மூலமாக அறிய வேண்டும்.**

பிருஹதாரண்யக உபநிஷத்தில் மெய்ப்பொருளைப் பற்றிப் பேசும்போது "இதன்று இதன்று" என்று ஒவ்வொன்ருக விலக்கிக் கூறப்பட்டிருக்கிறது. உலகத்தின்கண் நமது அநுபவத்தில் தெரிகிற ஒன்றும் மெய்ப்பொருளன்று. மெய்ப் பொருள் என்று மிருக்கும் தூய அறிவும் இன்பமுமே வடிவ மாய் அமைந்தது. உலகத்தின் கண் உள்ள பொருள்களோ இன்று தோன்றி நாளை மறைபவை. காலத்தால் அழியக் கூடியவை. ஜடப்பொருள்களாய் அறிவற்றுக் கிடப்பவை. தோற்றமும் மறைவுமான துன்பம் நிறைந்தவை. இவை எப்படி மெய்ப்பொருளாக முடியும்? எனவே, இவை ஒன்றும் மெய்ப்பொருள் இல்லை என்று உபநிஷத் விலக்கி விடுகிறது. அதன் மூலம், மெய்ப்பொருளின் தன்மையையும் எதிர் மறையாகக் குறிப்பிடுகிறது.

உயிரும் மெய்ப்பொருளும் ஒன்றே. உடலோடும் மனத் தோடும் கலந்து ஏதோ தனித்த ஒரு சிற்றுயிர் போல நாம் காட்சியளிக்கிறோம். இந்த உடல், மனம் முதலிய உபாதிகள் அல்லது தடைகளை நீக்கிக் கொண்டுவிட்டால் நாமே மெய்ப் பொருளாக எஞ்சுவதை உணரலாம். இதற்கு வழி, உபநிஷத்துக்களில் மஹாவாக்கியங்கள் அல்லது பேருரைகள் என்று சொல்லப்படும் வாக்கியங்களை நன்கு கற்று உணர்வதுதான்.

வேதங்கள் நான்கு. ஒவ்வொன்றிற்கும் ஒரு மஹாவாக் கியம் அமைந்திருக்கிறது. ஆக, மகாவாக்கியங்கள் நான்கு.

1. தத்-த்வம்-அஸி (அதாக நீ இருக்கிறாய்). இது ஸாம வேதத்தைச் சேர்ந்த சாந்தோக்ய உபநிஷத்தில் இருக்கிறது.

2. அஹம்-ப்ரஹ்ம-அஸ்மி (நான் மெய்ப்பொருளாக இருக்கிறேன்). இது சுக்ல யஜுர் வேதத்தைச் சேர்ந்த பிருஹதாரண்யக உபநிஷத்தில் வருகிறது.

3. ப்ரக்ஞானம் ப்ரஹ்ம (மெய்ப்பொருள் அறிவு வடிவமானது). இது ரிக்வேதத்தைச் சேர்ந்த ஐதரேய உபநிஷத்தில் காணப்படுகிறது

4. அயம் ஆத்மா ப்ரஹ்ம (இந்த உயிரும் மெய்ப் பொருளும் ஒன்றே). இது அதர்வ வேதத்தைச் சேர்ந்த மாண்டூக்ய உபநிஷத்தில் சொல்லப்படுகின்றது.

மகாவாக்கியம் என்ற பெயருக்குக் காரணம், இப்பேருரைகள் உயிரும் பரம்பொருளும் ஒன்றே என்று உணர்த்துவதுதான். ஆகவே, எல்லா உபநிஷத்துக்களின் கருத்தும் இதுதான் என்று பெறப்படுகின்றது.

இப்பொழுது தத்-த்வம்-அஸி என்ற பேருரையை எடுத்துக் கொண்டால், அதில் மூன்று சொற்கள் இருக் கின்றன. 1. தத் 2. த்வம் 3. அஸி. இவற்றுள் தத் என்பது, நம்மை விட வேறாக எங்கோ எட்ட இருப்பதாகக் கருதப் படுகின்ற இறைவனை "அது" என்று படர்க்கையாகக் காட்டும் கருத்துடைய சொல்லாகும். த்வம் என்பது ஆசிரியன் மாணவனை நோக்கி "நீ" என்று நேராக முன்னே இருக்கின்ற உயிரை முன்னிலைப் படுத்திக் காட்டும் சொல்லாகும். 'அஸி' என்பது, இறைவனும் உயிரும் இங்கேயே இப்பொழுதும் எப்பொழுதும் ஒன்றாகவே இருப்பதைக் காட்டும்.

இங்கு ஓர் ஐயம் எழத்தான் செய்யும். எங்கோ இருக்கும் இறைவனும், இதோ இருக்கும் உயிரும் எப்படி ஒன்ருக முடியும்? மேலும், இறைவன் முற்றும் உணர்ந்த, எல்லாம் வல்ல பெரியவன்; உயிரோ குறைந்த அறிவோடு சிறு ஆற்றல் கொண்டது. இறைவன் உலகையெல்லாம் படைத்தவன்; உயிர் படைக்கப்பட்டது. இறைவன் பிறப் பிறப்பில்லாதவன்; உயிர் பிறப்பிறப்பு உள்ளது. இரண்டும் எப்படி ஒன்ருக முடியும்? ஆனல் உபநிஷத்துக்கள் பொய் பேசமாட்டா. அப்படியானல், இப்பேருரைக்கு எப்படித் தான் பொருள் கொள்வது? இதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு.

இறைவனும் உயிரும் ஒன்று என்று சொல்லும்பொழுது, இரண்டிலும் அடிப்படையாக இருக்கக்கூடிய மெய்ப் பொருளை வைத்துத்தான் சொல்லுகின்ருேம். இறைவன் முற்று முணர்ந்தவன், உலகைப் படைத்தவன் என்ற இவையெல்லாம் முக்கியமல்ல. இறைவனுக் குள்ளும் உண்மையாய், அவனது தன்மையாய் விளங்குவது மெய்ப் பொருள். இதேபோல, உயிர் சிறு ஆற்றலும் சிற்றறிவும் படைத்துப் பிறவித்தளையில் கட்டுண்ட பிராணி என்பது முக்கியமல்ல. அந்தச் சிற்றுயிருக் குள்ளும் உண்மையாய், அதன் தன்மையாய் விளங்குவதும் மெய்ப்பொருள் என்பது தான் முக்கியம். மெய்ப்பொருள் என்ற அளவில் இரண்டும் ஒன்று என்றும், வேற்றுமைகளெல்லாம் அவித்யா-மாயை யினல் ஏற்பட்ட தோற்றங்கள் என்பதனல் அவற்றை நீக்கி ஒன்ருயிருக்கும் மெய்ப்பொருளை உணர வேண்டும் என்றும் இம் மகாவாக்கியம் கூறுகிறது.

இப்படிப் பொருள் கொள்ளுதற்கு உலக வழக்கிலும் எடுத்துக் காட்டுகள் உண்டு. நேற்று நாம் பார்த்த அதே மனிதனை இன்று பார்த்து அடையாளம் தெரிந்து கொண்டு

"அதே ராமன்தான் இவன்" என்னும்போது, இரண்டு ராமர்களிருப்பதாக நாம் சொல்லவில்லை. நேற்றும் இன்றும் நாம் பார்த்தது ஒரே ராமன்தான். இடமும் நேரமும் தான் வேறு. இப்படி வேறுபடும் இடத்தையும் நேரத்தையும் நாம் தள்ளிவிடவேண்டும். ஏனெனில் நமக்கு வேண்டுவது ஆள்தான். அவரை அடையாளம் கண்டு கொள்வதுதான் நோக்கம். மற்றது எதுவும் நமக்குத் தேவையில்லை.

இதுபோல, இறைவனிடத்தும் உயிரிடத்தும் உள்ள மெய்ப்பொருள் ஒன்றுதான் நாம் தெரிந்து கொள்ள வேண்டியது. இந்த ஒருமைக்கு மாறுன எதுவும் தேவை யில்லாதது என்று தள்ளி விடலாம். இந்த மெய்ப் பொருளின் ஒரு தோற்றம் இறைவன்; மற்ரெரு தோற்றம் உயிர். மாயையோடு கூடிய மெய்ப்பொருள் இறைவன் எனப்படுகிறது. அவித்யையின் விளைவான உடல், மனது இவற்றோடு கூடிய மெய்ப்பொருள் உயிர் எனப்படுகிறது. மாயையின் சுத்த ஸத்வகுணத்தோடு கூடிய மெய்ப்பொருள் ஈசன்; அதன் அசுத்த ஸத்வ குணத்தோடு கூடிய மெய்ப் பொருள் ஜீவன், என்றும் கூறலாம்.

இவ்வாறு, தேவையில்லாத சிலவற்றைத் தள்ளி அடிப்படைத் தத்துவத்தை எடுத்துக் கொள்ளும் முறைக்கு பாக-த்பாக-லக்ஷணை என்று பெயர், ஜஹத்-அஜஹத்-லக்ஷணை என்றும் இதைக் கூறுவதுண்டு. இதுவே **தத்-த்வம்-அஸி** என்னும் மகா வாக்கியத்தை உரை செய்யும் முறை.

## 31. மெய்வேறு பொய்வேறு

**ஆவித்யகம் சரீராதி—**
**த்ருச்யம் புத்புதவத்-க்ஷரம்**
**ஏதத்-விலக்ஷணம் வித்யாத்**
**அஹம் ப்ரஹ்மேதி நிர்மலம்**

*சரீர - உடல், ஆதி - முதலிய, த்ருச்யம் - காணப்படும் பொருள்கள், ஆவித்யகம் - அவித்யையினுல் ஆனவை. புத்புத - நீர்க்குமிழி, வத் - போல, க்ஷரம் - அழியக் கூடியவை. ஏதத் - இதற்கு, விலக்ஷணம் - மாறுபட்ட இயற்கையுடையதாக, அஹம் - நான், நிர்மலம் - தூய, ப்ரஹ்ம - மெய்ப்பொருள், இதி - என்று, வித்யாத்-அறியவேண்டும்.*

உடல் முதலிய பார்க்கப்படும் பொருள்கள் அறியாமையால் விளைந்தவை; நீர்க்குமிழிகள் போல விரைவில் அழியக் கூடியவை. இதற்கு மாருக, "நான் தூய மெய்ப்பொருள்" என்று ஒருவன் உணரவேண்டும்.

"மெய்ப்பொருளாக நீ இருக்கிருய்" (தத்-த்வம்-அஸி) என்று ஆசாரியர் சொல்லும் பொழுது, அது உபதேச வாக்கியம். அதை உணர்ந்த சீடன் "நான் மெய்ப்பொருளாக இருக்கிறேன்" என்று சொல்லுகிருன். இது அநுபவ வாக்கியம்.

## 32. நான் யார்?

தேஹ-அன்யத்வாத் ந மே ஜன்ம-
ஜரா-கார்ச்ய-லயாதய:
சப்தாதி-விஷயைஸ்-ஸங்கோ
நிரிந்த்ரியதயா ந ச

*தேஹ - உடலினின்றும், அன்யத்வாத் - வேருக, இருப்பதால், மே - எனக்கு, ஜன்ம - பிறப்பு, ஜரா - மூப்பு, கார்ச்ய-தேய்வு, லய - மரணம் முதலியவை, ந - இல்லை. மேலும், நிரிந்த்ரியதயா - புலன்கள் இல்லாமையால், சப்த - ஒலி, ஆதி - முதலிய, விஷயை :- பொருள்களோடு, ஸங்க :- சேர்க்கையும், ந - இல்லை.*

நான் உடலை விட வேருதலால், பிறப்பும், மூப்பும், தேய்வும் அழிவும் பிறவும் எனக்கில்லை. நான் புலன்களற்றிருப்பதால், ஒலி முதலிய புலனுக்குரிய பொருள்களுடன் எனக்குத் தொடர்பில்லை.

பிறப்பும் இறப்பும் மூப்பும் உடலுக்கு ஏற்படுபவை. ஒலி முதலியவை புலனுக்குரிய நுகர்பொருள்கள். உடலின் இயல்புகளும் புலன்களின் இயல்புகளும் மெய்ப்பொருளாகிய நமக்கு இல்லை என்று தெளிய வேண்டும். மாறாக நம்மை இவற்றோடு ஒன்றாக்கிக் குழப்பிக் கொள்வது அத்யாஸம் எனப்படும். இது முன்னரே கூறப்பட்டது.

ஒரு பொருளை இன்னொன்றாக நினைத்து விடுவது தர்மி-அத்யாஸம் எனப்படும். ஒரு பொருளின் இயல்பை இன்னொன்றின் இயல்பாக நினைத்து விடுவது தர்ம-அத்யாஸம். கிளிஞ்சலை வெள்ளியாக நினைத்தல் முதலாவது. படிகத்தில் நிறமிருப்பதாகக் காண்பது இரண்டாவது.

## 33. அச்சம் முதலியன எனக்கில்லை.

**அமனஸ்த்வாத் ந மே துக்க-**
**ராக-த்வேஷ-பயாதய:**
**அப்ராணோ-அமனா-சுப்ர-**
**இத்யாதி ச்ருதி-சாஸனாத்**

*அமனஸ்த்வாத் - மனம் இல்லாமையினால், மே - எனக்கு, துக்க - துன்பம், ராக - பற்று, த்வேஷ - வெறுப்பு, பய - அச்சம், ஆதய:- முதலியவை, இல்லை; (மெய்ப் பொருள்), அப்ராணோ - பிராணன் இல்லாதது, அமனா - மனம் அற்றது, சுப்ர: தூயது, இதி ஆதி - என்பது முதலிய, ச்ருதி - வேதம், சாஸனாத் - அறிவித்திருப்பதால்.*

நான் மனமற்றவன் ஆதலால் துன்பம், விருப்பு, வெறுப்பு, அச்சம் முதலியன எனக்கில்லை. "(மெய்ப் பொருள்) உயிர்க் காற்று இல்லாதது, மனம் அற்றது; தூயது" என்பது முதலிய உபநிஷத் வாக்குகளிருப்பதால்.

இங்கு குறிப்பிடப்பட்டிருப்பது முண்டக உபநிஷத்து (II, i, 2) ஆகும். விருப்பு வெறுப்பு, அச்சம் துன்பம் எல்லாம் மனத்தின் இயல்புகள். உயிர் மூச்சும் உயிர்ப் பிராணிகளுக்குத் தான், மெய்ப் பொருளுக்கன்று. அதற்குப் பிறப்பில்லையாதலால் உயிர் மூச்சும் இல்லை; இறப்பும் இல்லை.

மெய்ப்பொருளைப் பற்றி உபநிஷத்துச் சொல்வது தான் நமக்குத் தலையாய சான்று ஆகும். ஆழ்ந்த தவத்திலும் கூர்த்த அறிவிலும் தூய உள்ளத்திலும் நேராகத் தோன்றிய உண்மைகள் இந்த உபநிஷத்துக்கள். ஆகையால் அவற்றில் பிழை ஏதும் இருப்பதற்கு இடமில்லை. நம் புலன்களாலும் பகுத்தறிவினாலும் அறிய முடியாத மெய்ப் பொருட் தத்துவத்தை உணர்ந்து மகிழ்ந்த முனிவர்களின் வாக்குகள் அவை. இதனால் தான் இங்கு உபநிஷத்து மேற்கோளாகக் காட்டப்படுகிறது.

## 34. வேற்றுமைகளற்ற மெய்ப்பொருள் நான்

நிர்க்குணோ நிஷ்க்ரியோ நித்யோ
நிர்விகல்போ நிரஞ்ஜனஃ
நிர்விகாரோ நிராகாரோ
நித்ய முக்தஃ அஸ்மி நிர்மல:

*நிர்க்குண:- குணங்களற்று, நிஷ்க்ரியோ - செயலற்று, நித்ய:- நித்தியமாய், நிர்விகல்போ - வேற்றுமைகளற்று, நிரஞ்ஜன:- மாசுகளற்று, நிர்விகார - மாறுதல்களற்று, நிராகார:- வடிவமில்லாதவனாய், நித்ய - என்றும், முக்த:- விடுதலை பெற்றவனாய், நிர்மல:- குற்றங்களில்லாமல், அஸ்மி - இருக்கிறேன்.*

குணங்களற்று, செயலற்று, நித்தியமாய், வேற்றுமையற்று, மாசற்று, மாற்றமற்று, வடிவமற்று நான் என்றும் சுயேச்சையாய், தூயவனாய் இருக்கின்றேன்.

இது மெய்யுணர்ந்த பெரியோர் சொல்லுகின்ற சொல். தங்களது அநுபவ நிலையை அவர்கள் இவ்வாறு பேசுகின்றார்கள். இதை ஒரு சாதகன் சொல்லும்போது, தானும் மெய்யை உணர வேண்டி எப்பொழுதும் நினைத்துப் பார்க்கிறான் என்று வைத்துக் கொள்ள வேண்டும்.

உலகில் நமக்குத் தெரிந்த அத்தனையும் மெய்ப்பொருள் அன்று என்று இங்கு மறுக்கப்பட்டிருக்கிறது. உலகத்தின் இயல்பை வைத்துப் பார்த்தால், எது மெய்ப்பொருளின் இயல்பு இல்லை என்பது தெரியும். இதனால் மெய்ப்பொருளல்லாதவற்றோடு கலந்து நிற்கும் அறியாமை அகலும்.

## 35. எங்குமிருப்பவன் நான்

அஹம் ஆகாசவத் ஸர்வம்
பஹிர்-அந்தர் கத: அச்யுத:
ஸதா ஸர்வ-ஸமஸ்-ஸித்தோ
நிஸ்ஸங்கோ நிர்மல: அசல:

அஹம்-நான், ஆகாசவத்-ஆகாயத்தைப்போல, ஸர்வம்-எல்லாவற்றிற்கும், பஹிர்-வெளியிலும், அந்தர்-உள்ளிலும், கத:-உறைந்து, அச்யுத:-தன்னிலைதவறாமல், ஸதா - எப்பொழுதும், ஸர்வ - எல்லாவற்றிலும், ஸம - சமமாகவும், ஸித்த:- நிலைபெற்றவனாகவும், நிஸ்ஸங்க:- ஒன்றிலும் ஒட்டாமல், நிர்மல:-குற்றமற்று, அசல:- அசையாமல் (இருக்கிறேன்).

ஆகாயத்தைப் போலே, எல்லாவற்றிற்கும் உள்ளும் புறமுமாக தன்னிலை மாறாமல் இருக்கிறேன். எப்பொழுதும் எல்லாவற்றிலும் சமமாக இருக்கிறேன். (ஒன்றினால் உண்டு பண்ணப் படாமலே எல்லாவற்றிலும் முன்னர்) நிலைபெற்றிருக்கிறேன். (ஒன்றிலும்) சேராமல் இருக்கிறேன்; மாசற்றும் கலங்காமலும் இருக்கிறேன்.

இவ்வாறு நாம் நம்மைப் பற்றி இடைவிடாது சிந்தித்திருக்க வேண்டும். இதற்கு நிதித்யாஸனம் என்று பெயர். வேறு எதனுடனும் நம்மை இணைத்து நினைத்துக் கூடப் பார்க்கக் கூடாது.

நமக்குத் தெரிந்த பொருள்களுக்குள் ஆகாயம் ஒன்று தான் வெகு நுட்பமாயும், எங்கும் நிறைந்தும், உள்ளும் புறமுமின்றியும் இருக்கிறது. உபநிஷத்துக்களிலும், ஆகாயத்தைத்தான் மெய்ப்பொருளுக்கு ஒப்பிடுவது வழக்கம். எனினும், ஆகாயமும் மெய்ப்பொருளிடமிருந்து தோன்றியது தான். அதற்குத் தோற்றமும் அழிவும் உண்டு. மெய்ப்பொருளோ ஒன்றையும் சாராமல் தனித்துச் சுயேச்சையாய் நிலை பெற்றிருக்கும் ஸத்திய தத்துவம்.

ஒரு காரணத்திலிருந்து தோன்றியது எதுவும் காலம் வந்துற்றபோது அதன் காரணத்தில் ஒடுங்கும். மண் நீரிலும், நீர் நெருப்பிலும், நெருப்பு காற்றிலும், காற்று ஆகாயத்திலும், ஆகாயம் மெய்ப்பொருளிலும் ஒடுங்குகின்றன. மெய்ப்பொருளிலிருந்து இவையெல்லாம் தோன்றுவதை முறையாக எண்ணிப் பார்ப்பது **அத்யாரோபம்** என்றும், இவற்றை மெய்ப்பொருளில் முறையே ஒடுக்கி உண்மை உணருவது **அபவாதம்** என்றும் சொல்லப்படும்.

## 36. ஸச்சிதாநந்த மெய்ப்பொருள் நான்

**நித்ய-சுத்த-விமுக்த ஏகம்**
**அகண்ட-ஆனந்தம்-அத்வயம்**
**ஸத்யம் ஞானம் அனந்தம் யத்**
**பரம் ப்ரஹ்ம அஹம் ஏவ தத்**

அஹம்-நான், நித்ய-என்றுமுள்ள, சுத்த-தூய, விமுக்த-விடுதலையாகி நிற்கின்ற, ஏகம்-ஒன்றான, அகண்ட-பிளவில்லாத, ஆனந்தம்-இன்ப வடிவானது, அத்வயம்-இரண்டற்றது, ஸத்யம்-உண்மை, ஞானம்-அறிவு, அனந்தம்-எல்லையற்றது, என்ற யத்-எந்த, பரம்-உயரிய, ப்ரஹ்ம-மெய்ப்பொருளுண்டோ, தத்-அதுவே, ஏவ-தான்.

**இதுவும் நாம் நம்மைப் பற்றி இடையறாது சிந்திக்க வேண்டிய முறை. என்றுமிருப்பதாயும், தூயதாயும், என்றும் விடுதலையாகி, ஒன்றாய், பிளவற்று, பேரின்பமாய், இரண்டற்று, உண்மையாய், பேரறிவாய், எல்லையற்றதாய் இருக்கும் பரம் பொருள் எதுவோ, அதுவே நான்.**

காலத்தின் பிடிக்கு அப்பாற்பட்டதும், மாயையின் கலப்பற்றதும், என்றுமே தன்னிச்சையாய் இருப்பதும் தன்னைத் தவிரப் பிறிதொன்றில்லாததுமான ஒரே மெய்ப் பொருள் ஸத்யம், ஞானம், அனந்தம் என்று கூறப்படுகிறது. ஸத்யமே ஞானம்; ஞானமே அனந்தம்; அனந்தமே ஆனந்தம். ஸத்தியமாக இருப்பது என்றால் மற்ற இவையெல்லாமாகவும் இருக்கத் தான் வேண்டும். இவையெல்லாம் மெய்ப் பொருளின் உடைமைகளல்ல; இவை மெய்ப்பொருளே தான். அந்த மெய்ப்பொருளும் ஒன்று தான். எனவே, இந்தப் பெயர்களால் குறிக்கப்படும் பொருள் ஒன்று தான். ஒவ்வொரு பெயரும், மெய்ப்பொருளல்லாததை விலக்கு கிறது. ஸத்யம் என்ற பெயர் பொய்யை விலக்குகிறது. ஞானம் என்ற பெயர் அறியாமையையும், ஆனந்தம் என்ற பெயர் துன்பத்தையும் விலக்குகின்றன. ஸத்யம், ஞானம், அனந்தம் ப்ரஹ்ம என்பது தைத்திரீய உபநிஷத்திலே வருவது (II, 1). எது மெய்ப்பொருள் என்ற கேள்விக்குப் பதிலாக இது சொல்லப்படுகின்றது. ஆகாயத்திலே இரவில் மின்னு கின்றவற்றுள் எது சந்திரன் என்று ஒரு குழந்தை கேட்டால், இருப்பதற்குள் எது பெரியதாகவும் மிகுந்த ஒளி

படைத்ததாகவும் இருக்கிறதோ அது சந்திரன் என்றுதான் பதில் சொல்லுகிறோம். இங்கு, பெரியது, மிகுந்த ஒளி படைத்தது என்பதெல்லாம் முக்கியமல்ல; சந்திரன் எது என்று சுட்டிக் காட்டுவது தான் முக்கியம். எனவே, பெரியது, மிகுந்த ஒளி படைத்தது என்ற வர்ணனைகளெல்லாம் சந்திரனை எது என்று காட்டும் நோக்கமுடையன. அவையெல்லாம் வெவ்வேறு பொருள்களைச் சொல்லுகின்ற சொற்களாயினும், இந்த இடத்தில் சந்திரன் ஒன்றைத் தான் அவை குறிக்கும். பலவேறு பொருள்களுடைய சொற்களால் ஓர் உரை அமைந்திருந்தாலும், சிற்சில சமயங்களில், அச்சொற்களெல்லாம் ஒரே பொருளைக் குறிக்கக்கூடும். இதற்கு அகண்டார்த்தம் என்று பெயர்; அதாவது, பல பொருட் சொற்கள் ஒரு கருத்து.

இந்த முறையில் தான் ஸத்யம், ஞானம், அனந்தம் என்ற உரைக்கும் பொருள் காண வேண்டும். ஆகவே இம்மூன்றும் மெய்ப்பொருளுக்கு ஸ்வரூபலக்ஷணம் எனப்படும். அதாவது, மெய்ப்பொருளை எது என்று காட்டுகின்ற சொற்கள் இவை. அதன் குணங்களையோ, இயல்பையோ இவை சொல்ல வரவில்லை.

இதற்கு மாறாக இருப்பது தடஸ்த-லக்ஷணம் என்பது. இதைப் பற்றி முன்னரே பார்த்தோம். ஒரு கிராமத்துக்குச் சென்று "இன்னாருடைய வீடு எது?" என்று ஒருவரைக் கேட்கிறோம். அவர், "அதோ, கூரை மேல் ஒரு கோழி உட்கார்ந்திருக்கிறதே, அந்த வீடு தான்' என்று காட்டுகிறார். கோழி எப்பொழுதும் அந்த வீட்டின் கூரைமேல் உட்கார்ந்திருக்கவில்லை. ஆனாலும், வீட்டை அடையாளம் காண்பிக்க மட்டும் அது உதவுகிறது. எனவே, இதை வீட்டிற்குத் தடஸ்த-லக்ஷணம் என்கிறோம். "அதோ! கிளைக்கு மேல் தெரிகின்றதே, அது தான் சந்திரன்" என்று

குழந்தைக்குச் சுட்டிக் காட்டுகின்றோம். இங்கு கிளைக்கும் சந்திரனுக்கும் எந்த விதமான தொடர்பும் இல்லை. என்றாலும், சந்திரனைச் சுட்டிக் காட்டும் அளவுக்கு அது உதவுகிறது.

புது மணமக்களுக்கு அருந்ததி நட்சத்திரத்தைக் காட்டும்பொழுது, முதலில் அதன் அருகிலிருக்கும் வேறு ஏதோ ஒரு நட்சத்திரத்தைக் காட்டிப் பின்னர் உண்மையான அருந்ததி நட்சத்திரத்தைக் காட்டுவார்கள். அதுபோல, தடஸ்த-லக்ஷணம் சொல்லிப் பின் ஸ்வரூப லக்ஷணம் சொல்லப் படுகிறது.

இதுபோல, மெய்ப்பொருள் ஸத்யம் (ஸத்), ஞானம் (சித்) அனந்தம் (ஆனந்தம்) என்றிருந்தாலும், உலகைப் படைத்த காரணமான இறைவன் என்று அதைக் குறிப் பிடும் போது அது மெய்ப்பொருளுக்குத் தடஸ்த-லக்ஷணம். உலகைப் படைத்து, காத்து, அழிப்பது என்ற செயல் மெய்ப் பொருளுக்கு இன்றியமையாதது அன்று. அத்துவைத மரபின்படி உலகம் மாயமான தோற்றமாதலின், அதைப் படைத்தல் முதலிய தொழில்களும், அத்தொழில்களுக் குரியவன் இறைவன் என்பதும் மெய்யின் இயல் அன்று.

## 37 இடையிலா தன்னிலைத் தியானம்

ஏவம் நிரந்தரக்ருதா ப்ரஹ்ம-
ஏவ அஸ்மி இதி வாஸனா
ஹரதி அவித்யா விக்ஷேபான்
ரோகான் இவ ரஸாயனம்

ப்ரஹ்ம ஏவ - மெய்ப்பொருளாகவே, அஸ்மி - இருக்கிறேன், இதி - என்று, ஏவம் - இதுபோல், நிரந்தர - இடையறுது, க்ருதா - செய்யும்

-ப்பட்ட (தியானத்தின்). வாஸனா - சுவடுகள், அவித்யா - அவித்யை யினுடைய, விக்ஷேபான் - பொய்த் தோற்றங்களை, ஹரதி-அழிக்கிறது, ரஸாயனம் - மருந்து, ரோகான் - நோய்களை (அழிப்பது), இவ-போல.

"மெய்ப்பொருளே நான்" என்று இடைவிடாமல் (தியானம்) செய்யப்பட்டதன் விளைவாக ஏற்பட்ட நினைவுச் சுவடுகள் அவித்யையின் பொய்த் தோற்றங்களை அழிக்கிறது, மருந்து நோய்களை (அழிப்பதுபோல).

"உடலே நான்" என்று வெகு காலமாக ஊறிப்போன எண்ணத்தை, "மெய்ப்பொருளே நான்" என்ற இடையறுத நினைப்பினால் மாற்றவேண்டும்.

மருந்து நோயை அழிப்பதுபோல இந்த நினைவு அறியாமையின் விபரீதத் தோற்றங்களை மாய்த்துவிடும். நோய் மனித உடலின் இயற்கையன்று. அது எப்போதோ வந்து தொற்றிக் கொள்கிறது. மருந்தினால் அதை நீக்கி விட்டால் உடல் மறுபடி தன் இயல்பான நிலைக்குத் திரும்பி விடுகின்றது.

இது போல, அறியாமை என்னும் நோய் உயிரைப் பற்றிக் கொண்டு ஆட்சி செய்கிறது. மெய்ப்பொருளின் நினைவு என்ற மருந்தினால் இதை நீக்கி விட்டால், உயிர் தன் சொந்த நிலையை அடைகின்றது. ஸத்-சித்-ஆனந்தமே நமது உண்மை நிலை.

## 38 தியான முறை

விவிக்த தேச-ஆஸீன:
விராகோ விஜிதேந்த்ரிய:
பாவயேத் ஏகம் ஆத்மானம்
தம் ஆனந்தம் அனன்ய தீ:

*விவிக்த - தனியான, தேச - இடத்தில், ஆஸீன:- அமர்ந்து, விராகோ - பற்றுக்களை விட்டு, விஜித - வெல்லப்பட்ட, இந்த்ரிய:- புலன்களையுடையவனாய், ஏகம் - ஒன்றானதும், அனந்தம் - எல்லையற்றதும் ஆன, தம் - அந்த, ஆத்மானம் - மெய்ப்பொருளை, அனன்ய - வேறொன்றையும் நினையாத, தீ - புத்தியோடு, பாவயேத் - சிந்தித்திருக்கவேண்டும்.*

**தனியிடத்தே அமர்ந்து, பற்றுக்களின்றி புலன்களை வென்று, வேறொன்றையும் எண்ணாமல், அந்த எல்லையில்லாத ஒரு மெய்ப்பொருளை நினைந்திருக்கவேண்டும்.**

மெய்ப்பொருளைப் பற்றிய தியானத்தை எப்படிச் செய்ய வேண்டுமென்று இங்கே சொல்லப்படுகின்றது. தனியிடத்தே எந்த இடையூறுமில்லாமல் இருந்து இந்தத் தியானத்தைச் செய்யவேண்டும். ஸ்ரீமத் பகவத் கீதையிலும், தனியிடத்தே இருந்து தியானம் செய்ய வேண்டும் என்று சொல்லியிருக்கிறது (VI-10). தனிமையையும் கூட்டத்தை வெறுத்தலையும் மெய்யறிவு என்றே கீதை பேசுகின்றது. "இனிது இனிது ஏகாந்தம் இனிது" என்றனர் தமிழ் மூதாட்டியும். "ஒரு பூதருமறியாத் தனி வீட்டிலிரு" என்றார் அருணகிரிநாதர்.

## 39 ஒருமையின் தியானம்

ஆத்மனி ஏவ அகிலம் த்ருச்யம்
ப்ரவிலாப்ய தியா ஸுதீ
பாவயேத் ஏகம் ஆத்மானம்
நிர்மல ஆகாசவத் ஸதா

*ஸு - நல்ல, தீ:- புத்தியுடையவன், தியா - புத்தியினால், த்ருச்யம் - காணப்படுகின்ற உலகத்தை, அகிலம் - எல்லாம், ஆத்மனி ஏவ - மெய்ம்பொருளிலேயே, ப்ரவிலாப்ய - ஒடுக்கி, ஏகம் - ஒரே, ஆத்மானம் -*

மெய்ப்பொருளை, நிர்மல - மாசற்ற, ஆகாச - ஆகாயத்தை, வத் - போல, ஸதா - எப்பொழுதும், பாவயேத் - சிந்திக்க வேண்டும்.

நல்லறிவு படைத்த மனிதன் தன் அறிவினாலே பார்க்கப்படும் பொருளையெல்லாம் மெய்ப் பொருளில் ஒடுக்கி, தூய ஆகாயத்தைப் போன்ற (அந்த) ஒரே மெய்ப்பொருளை எப்பொழுதும் சிந்தித்திருக்க வேண்டும்.

அத்வைத பாவனை இங்கு எடுத்துச் சொல்லப் படுகின்றது. உலகத்தின் தோற்றத்தை அழிப்பது என்றால் அறிவைக் கொண்டு அதன் உண்மையைத் தெளிதல் என்று பொருள். இவ்வுலக மனைத்தும் மெய்ப்பொருளிடமிருந்து எப்படித் தோன்றியிருக்கும் என்பதை அறிவினால் ஆராய்ந்து தெளிவது போல, இவ்வுலகமனைத்தும் எப்படி மெய்ப் பொருளிடம் சென்று ஒடுங்கும் என்பதையும் அறிவினால் ஆராய்ந்து தெளிய வேண்டும். இதை அத்யாரோப-அபவாதம் என்பர். முதலில் நம் அறிவிற் தெரிவது தோற்றம். இந்தப் பன்மையான தோற்றம் எப்படி ஏற்பட்டது என்று யோசிக்கும் பொழுது, "மெய்ப்பொருளி லிருந்து ஆகாயம், ஆகாயத்திலிருந்து காற்று. காற்றிலிருந்து நெருப்பு, நெருப்பிலிருந்து நீர், நீரிலிருந்து மண், மண்ணி லிருந்து பயிர்கள், பயிர்களிலிருந்து உணவு, உணவிலிருந்து உயிர்" உண்டாகியிருக்கவேண்டும் என்று அறிகிறோம். இந்தப் படைப்பும் ஐங்கலவை மூலமாக ஏற்பட்டிருக்க வேண்டும் என்பதையும் உணர்கிறோம். இதன் பின்னர், இந்த உலகில் நம்முடைய வாழ்க்கையும். அதன் இன்ப துன்பங்களும், எவ்வாறு ஏற்பட்டிருக்கின்றன என்பதையும் காண்கிறோம். இதெல்லாம் ஒரே மெய்ப்பொருளின் தோற்றங்கள் என்று அறிகிறோம். இத்தோற்றங் களெல்லாம் உண்மையினிடத்தில் பொய்யாகத் தோற்று

விக்கப்பட்டவை என்று சொல்கிறோம். இதுதான் அத்யா ரோபம் என்பது.

பின்னர், இந்த அத்யாரோபத்தை நீக்கி உண்மையை அது உள்ளபடியே உணர முனைகிறோம். ஒன்றன்பின் ஒன்றாக ஒவ்வொரு தோற்றத்தையும் அதன் காரணத்தில் ஒடுக்குகிறோம். இப்படி ஆகாயம் வரை வந்து, பின் ஆகாயத்தையும் அதன் மூலகாரணமான மெய்ப்பொருளில் ஒடுக்குகிறோம். இதற்கு அபவாதம் அல்லது நீக்குதல் என்று பெயர்.

இதையே இன்னொரு முறையிலும் செய்யலாம். உலக மனைத்தும் தோற்றமாக ஏற்பட்டிருப்பது நமக்குத்தான். ஆகையினால், உடல், புலன்கள், அறிவு எல்லாவற்றையும் நமக்குள் ஒடுக்கவேண்டும். ஆழ்ந்த தூக்கத்தில் உலக மனைத்தும் ஒடுங்குவது கண்கூடு. அதற்குச் சாக்ஷியாக நாம் இருப்பதும் கண்கூடு. மிச்சமிருக்கும் அறியாமையையும் அழித்துவிட்டு நம் உண்மை நிலையில் ஸத்-சித்-ஆனந்த வடிவமாக நாம் இருந்தபடி இருக்கும்பொழுது தோற்றம் என்ற அத்யாரோபத்தின் அழிவு அல்லது அபவாதம் ஏற்படுகின்றது.

## 40 மெய்யுணர்ந்தவனுக்கு வேற்றுமை-களில்லை.

ரூப-வர்ணாதிகம் ஸர்வம்
விஹாய பரமார்த்தவித்
பரிபூர்ண - சிதானந்த-
ஸ்வரூபேண அவதிஷ்ட்டதே

ரூபவர்ண ஆதிகம் - உருவம், நிறம் முதலிய, ஸர்வம் - எல்லை வற்றையும், விஹாய - விட்டு விட்டு, பரமார்த்த - உண்மையை, வித் - அறிந்தவன், பரிபூர்ண - நிறைந்த, சித் - பேரறிவு, ஆனந்த - இன்பம் என்ற, ஸ்வரூபேண - தன் வடிவமாக, அவதிஷ்டதே - நிற்கிறன்.

**உண்மையுணர்ந்தவன், உருவம், ஜாதி முதலிய (வேற்றுமைகளை) எல்லாம் களைந்து விட்டு முழுமை யானபேரறிவு, பேரின்பம் என்ற வடிவமாக நிற்கிறன்.**

உண்மையினிடத்து எந்தவிதமான வேற்றுமைகளும் இல்லை. இயற்கையாக ஏற்பட்ட வேற்றுமைகளும் இல்லை; மனிதனால் ஏற்படுத்தப்பட்ட வேற்றுமைகளுமில்லை. பொருள்களுக்குள்ள உருவம் முதலியன இயற்கையில் அமைந்தவை. ஜாதி, மத வேற்றுமைகள் மனிதனால் உருவாக்கப்பெற்றவை.

இன்னும் சில வேற்றுமைகள் ஒரு பொருளின் அமைப் பிலேயே காணப்படும். உதாரணமாக, ஒரு மனிதனிடத் திலேயே அவனது தலை வேறு, கால் வேறு, கை வேறு.

இதை நூலறிந்த புலவர்கள் "மெய்ப் பொருள் ஸஜாதீய விஜாதீய ஸ்வகத பேத ரஹிதம்" என்று சொல் வார்கள். தன்னினத்தைச் சேர்ந்த மற்றொரு பொருளி லிருந்து வேறுபடுவது ஸஜாதீய-பேதம். வேறு இனத்தைச் சேர்ந்த ஒரு பொருளிலிருந்து வேறுபடுவது விஜாதீய பேதம். தன்னிடத்திலேயே வேற்றுமைகளுடையதாக இருப்பது ஸ்வகத பேதம். இம்மூன்றுமே மெய்ப்பொருளிடத்திலே கிடையாது.

மேலும், உண்மையை உணர்வதும் அவ்வுண்மையாக நிற்பதும் ஒன்றே. பொதுவாக உலகில் ஒரு மரத்தை நாம் அறியும்பொழுது நாம் அம்மரமாகவே ஆகிவிடுவதில்லை.

ஆனால் நாம் யார் என்று தெரிந்து கொள்வதும் நாமாக இருப்பதும் ஒன்றுதான். இங்கு அறிவும் பொருளும் ஒன்றாகி விடுகின்றன. அறியப்படும் பொருளும் அறிபவனும் ஒன்றாகவே இருப்பதனால் இது ஏற்படுகிறது. இது ஸ்வரூப அவஸ்தானம் எனப்படும். அதாவது, நாம் நாமாக இருப்பது. இதுவே முக்தி எனப்படும்.

## 41. மெய்ப்பொருளில் வேற்றுமைகளில்லை

ஞாத்ரு-ஞான-ஞேய பேத:
பரே ந ஆத்மனி வித்யதே
சித்-ஆனந்த- ஏக- ருபத்வாத்
தீப்யதே ஸ்வயம் ஏவ தத்

*பரே - உயர்ந்த, ஆத்மனி - மெய்ப்பொருளில், ஞாத்ரு - அறிபவன், ஞானம் - அறிவு, ஞேயம் - அறியப்படும் பொருள் என்ற, பேத :- வேற்றுமையானது, ந வித்யதே - காணப்படவில்லை. தத் - அது, சித் - அறிவும், ஆனந்த - இன்பமுமே, ருபத்வாத் - வடிவமாதலால், ஸ்வயம் ஏவ - தானே, தீப்யதே - விளங்குகின்றது.*

**அறிபவன், அறிவு, அறியப்படும் பொருள் என்ற வேற்றுமை பரம்பொருளில் இல்லை. அறிவு, இன்பம் இவற்றின் வடிவமாக ஒன்றாகவே அது இருப்பதால், அது தானே (பிறிதொன்றைச் சாராமல்) ஒளிர்கின்றது.**

அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்ற வேற்றுமைகள் பேரறிவான அகண்ட சுத்த மெய்ப்பொருளுக்கு இல்லை. இவையெல்லாம் ஏதேனும் ஒரு தடையினால் (உபாதியினால்) ஏற்படுகின்றன. ஒரே மெய்ப்பொருள் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற நான்கும்

அடங்கிய அந்தக்கரணத்தோடுசேரும்பொழுது "அறிபவன்" ஆகிறது. மாயையோடு கலந்து மெய்ப்பொருள் அறியப் படும் பல பொருள்களாக வடிவங்கொள்கிறது. பொருள் களுடன் புலன்கள் மூலம் தொடர்பு ஏற்பட்டு அப்பொருள் களின் வடிவங்களை மனம் அச்சாகப் பதித்துக் கொள்ளும் பொழுதும், அந்த அச்சுக்களை மனத்திற்குள்ளும் ஒளியாக இருக்கும் மெய்ப்பொருள் அறிவிக்கும்பொழுதும் அறிவு உண்டாகின்றது.

தெரியாமலிருப்பதைத் தெரிவிப்பது அறிவு. இது மெய்ப் பொருளுக்குரிய தன்மை. புலன்கள்மூலம் பொருள்களைப்பற்றி அதுவரை இருந்த அறியாமைப் போர்வையை நீக்கி அறிவிப்பது அறிவு. மெய்ப்பொருளின் ஒளி, மனத்தோடு கலந்து, அதை உயிர்ப்பித்து உணர்வூட்டி அறிவுக்கருவியாக மாற்றுகிறது. இத்தகைய மனம் புலன்களூடே சென்று புறத்தே இருக்கும் பொருள்களைப் பற்றுகிறது. அப்படிப் பற்றும்போது அப்பொருளின் வடிவத்தைத் தானும் எடுத்துக்கொள்கிறது. இந்த மாற்றத்திற்கு **மனோவ்ருத்தி** அல்லது **அந்தக்கரண வ்ருத்தி** என்று பெயர்.

மனத்தின் **வ்ருத்தியால்** அந்தப் பொருளைப்பற்றிய அறியாமை நீங்க, மெய்ப்பொருள் ஒளியால் புறப்பொருள் தெரிகிறது; அறியப்படுகிறது. இதுதான் பொதுவாக உலகத்திலே அறிவு உண்டாகும் முறை.

மெய்ப்பொருளைப்பற்றிய அறிவு உண்டாவதற்கும் **மனோவ்ருத்தி** வேண்டும். உபநிஷத்துக்களில் காணும் **தத்-த்வம் அஸி** போன்ற பேருரைகளைக் கசடறக் கற்று, அதைத் தொடர்ந்து தியானம் செய்யும்போது, மெய்ப் பொருளைப்பற்றி நிற்கிற மனது ஒருமுகப்படுகிறது. மெய்ப்

பொருளைத் தவிர வேறெல்லாவற்றையும் விலக்கி, மெய்ப் பொருள் ஒன்றைப்பற்றிய நினைவே மனத்தை முழுவதும் நிரப்பிக் கொண்டிருக்கும்பொழுது, மனம் மெய்ப் பொருளின் வடிவமாக நிற்கிறது. இது அகண்டாகார விருத்தி அல்லது ப்ரம்ஹாகார விருத்தி எனப்படும், அதாவது, இரண்டற்ற உண்மையின் வடிவமான மனம் என்பது பொருள். இந்த இடத்தில்தான் பொதுவாக உலகத்துப் பொருளைப்பற்றி ஏற்படுகின்ற அறிவுக்கும் மெய்ப் பொருளைப்பற்றிய அறிவிற்கும் வேற்றுமை காணப்படு கிறது.

உலகத்துப் பொருள்களைப்பற்றிய அறிவில், விருத்தி மட்டுமல்லாமல், அதை அறிவிற்கு விளங்குமாறு செய்ய மெய்ப்பொருள் ஒளியும் வேண்டும். இதை வேதாந்த மொழி யில் சொல்வதானால், இங்கே விருத்தி-வ்யாப்தி மட்டுமன்று; பல-வ்யாப்தியும் வேண்டும். அதாவது, மனத்தில் பதிவதும், அப்படிப் பதிந்ததை அறிவிப்பதும் ஆகிய இரண்டு தொழில்கள் இங்கு நடைபெறுகின்றன. மெய்ப்பொருளைப் பற்றிய அறிவிலோ, அதுவே அறியப்படும் பொருளாகவும் அறிவாகவும் ஒருங்கே அமைந்திருப்பதால், விருத்தி-வ்யாப்தி மட்டும் போதும். அதாவது, மனம் மெய்ப்பொருளைத் தவிர வேறொன்றையும் நினையாமல், மனத்தில் மெய்ப் பொருளே நீக்கமற நிறைந்து அது ஒரு தன்மையதாக அமைதியுற்றால் மட்டும் போதும். அங்கே மெய்ப்பொருள் தானே காட்சி தருகிறது; மெய்யுணர்வு உடனே தோன்று கின்றது. விளக்கைக் காண்பிக்க மற்றொரு விளக்குத் தேவையில்லை அல்லவா? விளக்கை மறைத்த திரை விலக வேண்டும், அவ்வளவுதானே?

## 42. கடைந்தெடுத்த மெய்யறிவுத்தீ

ஏவம் ஆத்மா அரணௌ த்யான-
மதனே ஸததம் க்ருதே
உதித-அவகதி-ஜ்வாலா
ஸர்வ-அஞ்ஞான-இந்தனம் தஹேத்

ஏவம் - இம்முறையில், ஆத்மா-மெய்ப்பொருள் என்ற, அரணௌ - அரணிக் கட்டையில், த்யான - தியானம் என்ற, மதனே - கடைதலானது, ஸததம் - இடையறாது, க்ருதே - செய்யப்படும் பொழுது, உதித - எழுகின்ற, அவகதி - மெய்யுணர்வு என்னும், ஜ்வாலா - தீக்கொழுந்து, ஸர்வ - எல்லா, அஞ்ஞான - அறியாமையென்னும், இந்தனம் - விறகையும், தஹேத் - எரித்து விடும்.

இவ்வாறு, மெய்ப் பொருள் என்ற அரணிக் கட்டையில், இடை விடாமல் தியானம் என்ற கடைதல் செய்யப்பட்டால், அப்பொழுது எழும் அறிவுத்தீ எல்லா அறியாமை விறகையும் எரித்து விடுகிறது.

மனம் இடையறாது மெய்ப்பொருளை நினைந்து, வேறெந்த நினைவும் உட்புகாமல் விலக்கி, அதிலேயே ஆழ்ந்து போக வேண்டும். இதுவே தியானம் என்பது. இங்குச் சொல்லப்பட்டிருக்கிற அரணிக்கட்டை உருவகம் கைவல்ய உபநிஷத்தில் காணப்படுகின்றது.

எதை இடையறாமல் நினைக்கின்றோமோ அதாகவே மாறிவிடுகின்றோம். இது தத் க்ரது-நியாயம் என்று சொல்லப்படும். குளவிக்கு உணவாகக் குளவிக் கூட்டில் வைக்கப்பெறும் புழு, குளவி வந்து கொட்டும் என்ற பயத்திலே அதையே நினைந்து குளவியாகவே மாறிவிடும் என்பர். இது ப்ரமர-கீட-நியாயம் எனப்படும்.

விறகை எரித்துவிட்டு நெருப்புத் தானும் அணைந்து போகும். இதுபோல, அகண்டாகார-வ்ருத்தி என்ற அறிவும் ஏனைய அறியாமைகளை ஒருங்கே அகற்றிவிட்டு, மேலும் அகற்றுவதற்கு ஒன்றும் இல்லாத நிலையில், தானும் அடங்கிப் போகும். இந்தக் கணத்தில், மெய்ப்பொருளின் தரிசனம் ஏற்படும்.

"மெய்யறிவை விடப் புனிதமானது உலகில் இல்லை" என்று கண்ணன் கீதையில் கூறுகின்றான். "மெய்யறிவு என்னும் நெருப்பில் வினைகளெல்லாம் அழிகின்றன" என்றும் அவன் கூறுகின்றான். "போய பிழையும் புகுதருவான் நின்றனவும், தீயினில் தூசாகும்" என்பது ஆண்டாள் திருவாக்கு.

## 43. அறியாமை விலகி அறிவு உண்டாகும்

அருணேன இவ போதேன
பூர்வம் ஸந்தமஸே ஹ்ருதே
ததः ஆவிர்பவேத் ஆத்மா
ஸ்வயம் ஏவ அம்சுமான் இவ

அருணேன - (சூரிய சாரதியான) அருணனால்; இவ - (இருட்டு விலகுவது) போல, போதேன - மெய்யறிவினால், பூர்வம் - முதலில், ஸந்தமஸே - மண்டிக்கிடக்கும் அறியாமை இருள், ஹ்ருதே - நீக்கப் படும்பொழுது, ததः- அதன் பின், ஆத்மா - மெய்ப்பொருள், ஸ்வயம் ஏவ - தானே, அம்சுமான் இவ - சூரியனைப் போல, ஆவிர்பவேத் - இலங்கும்.

அருணோதயத்தினால் (இருள் விலகுவது போல) மெய்யறிவினால் முதலில் அகவிருள் (அறியாமை) விலகும் போது, அதனால், மெய்ப்பொருள் தானே விளங்கும், சூரியனைப்போல.

அருணன் சூரியனுடைய தேரோட்டி. அவன் தோன்றியவுடனேயே இருள் விலகிவிடுகிறது; அதைத் தொடர்ந்து சூரியன் உதிக்கிறன். இருள் விலகுவதுதான் இங்கு நிகழ்வது. சூரியன் தானே விளங்குவான்.

அவித்யை என்னும் இருள் அகன்றல், மெய்ப்பொருள் தானே விளங்கும்.

"மெய்யறிவினல் அறியாமையை அழித்தவர்களிடத்தில், அவ்வறிவு மெய்ப்பொருளைக் காட்டுவிக்கிறது" என்று பகவத் கீதை கூறுகின்றது. (V, 16).

## 44. மெய்ப்பொருள் புதிதாகப் பெறப்படுவதன்று

ஆத்மா து ஸததம் ப்ராப்தঃ
அபி அப்ராப்தவத் அவித்யயா
தந்நாசே ப்ராப்தவத் பாதி
ஸ்வகண்டாபரணம் யதா

ஆத்மா - மெய்ப்பொருளோ, து - என்றல், ஸததம் - எப்பொழுதும், ப்ராப்த:- அடையப்பட்டதாக, அபி - இருந்தாலும், அவித்யயா - அறியாமையினல், அப்ராப்த - அடையப்படாதது, வத் - போலக் காண்கின்றது. தத் - அந்த அறியாமை, நாசே - அழியும் பொழுது, ப்ராப்தவத் - புதிதாக அடையப்பட்டது போல, பாதி - தோன்றுகிறது, யதா - எப்படி, ஸ்வகண்ட - தன் கழுத்தில் பூண்ட, ஆபரணம் - நகையை (கெட்டுப் போய் விட்டதாக எண்ணிப் பின் கழுத்திலிருப்பதாகக் கண்டு, ஏதோ புதிதாக அதை அடைந்தது போல ஒருவன் எண்ணுகின்றனே அதுபோல).

என்றுமே மெய்ப்பொருள் அடையப்பட்டிருந்தாலும், அறியாமையினல் அடையப்படாதது போலவும், அந்த (அறியாமை) அழியும் பொழுது

**(புதிதாக) அடையப்பட்டது போலவும் தோன்று கிறது, தன் கழுத்திலுள்ள நகையைப் போல.**

நாம் என்றுமே மெய்ப்பொருளாகத்தான் இருக்கி ரோம். ஆனால், அப்படி இல்லாதது போலவும், அறியாமை அகன்று புதிதாக பெறப்பட்ட ஒரு நிலை போலவும் எண் ணிக் கொண்டிருக்கிறோம்; இது தவறு.

நாம் நம்மை ஒரு சிற்றுயிராக நினைத்துக் கொண் டிருக்கும்போது கூட மெய்ப்பொருளாகத் தான் இருக்கி ரோம்.

தங்கச் சங்கிலியைக் காணோமே என்று ஒருவர் தேடுகிறார். கடைசியில் அவர் கழுத்திலேயே அந்தச் சங்கிலி இருப்பதை உணருகிறார். சங்கிலி புதிதாக அங்கு வரவில்லை. அது இருந்தபடிதான் இருந்தது. இந்த மனிதர் தான் ஏதோ அது தொலைந்து போய் விட்டது போலவும் புதிதாக அதை அடைந்து விட்டது போலவும் நினைத்து விட்டார்.

இப்படித்தான், நம்முடைய உண்மை நிலையை மறந்து, பல சிறுமைகளுக்கு ஆட்பட்ட மனிதர்களாக நம்மை எண்ணுகிறோம். பின் உண்மை நிலை தெரியும் பொழுது, ஏதோ புதிதாக அப்படி மாறி விட்டதாக எண்ணு கிறோம்.

தன்னை மறந்த இந்த நிலைக்கு வேறு ஒரு உதாரணமும் சொல்லுவதுண்டு குழந்தையான அரச குமாரனை திருடர்கள் கடத்திக் கொண்டுபோய் வளர்க்கிறார்கள். அந்தக் குழந்தை வளர்ந்து பெரியவனாகிறான். ஆனால் தன்னைத் திருடன் என்றே நினைத்திருக்கிறான். பல ஆண்டு களாக இக்குழந்தையைத் தேடிவந்த அரசனுடைய ஆட்கள்

கடைசியில் சில அடையாளங்களைக் கொண்டு இந்த அரச குமாரனைக் கண்டுகொள்கிறார்கள். அவனுடைய அரசுரிமையைச் சொல்லி அவனுடைய உண்மை நிலையை நினைவுபடுத்துகிறார்கள். தன் நிலை உணர்ந்து அரசகுமாரன் அத்திருடர் கூட்டத்தை வளைத்துப் பிடித்து தண்டித்து விடுகிறான். தன்னியல்பு தலையெடுக்கிறது.

இதே போன்று ஒரு கதையை, ஆட்டுமந்தையோடு சேர்ந்து வளர்ந்த ஒரு சிங்கக்குட்டியைப்பற்றியும் கூறுவதுண்டு. ஆடுகளோடு ஆடுகளாக வளர்ந்த சிங்கக் குட்டியைக் கண்ணுற்ற மற்றச் சிங்கங்கள் அதன் சுயரூபத்தை நினைவுபடுத்தியவுடன், உடனே பக்கத்திலிருந்த ஆட்டை அடித்துத் தின்றுவிட்டது.

## 45. மெய்ப் பொருளில் உயிர்க் கற்பனை

ஸ்தாணௌ புருஷவத் ப்ராந்த்யா
க்ருதா ப்ரஹ்மணி ஜீவதா
ஜீவஸ்ய தாத்த்விகே ரூபே
தஸ்மின் த்ருஷ்டே நிவர்த்ததே

*ப்ரஹ்மணி - மெய்ப்பொருளில். ஜீவதா - உயிர்த்தன்மையானது, ஸ்தாணௌ - தூணில், புருஷ - மனிதனை, வத் - போல, ப்ராந்த்யா - பிரமையினால். க்ருதா - செய்யப்பட்டிருக்கிறது. தஸ்மின் - அதில் (மெய்ப்பொருளில்), ஜீவஸ்ய - உயிரினுடைய, தாத்த்விகே - உண்மையான, ரூபே - வடிவமானது, த்ருஷ்டே - அறியப்படும் பொழுது, (அந்த உயிர்த்தன்மை) நிவர்த்ததே-மறைகிறது.*

மெய்ப்பொருளில் ஒரு சிற்றுயிரின் தன்மை தவறாக ஏற்பட்டிருக்கிறது, ஒரு கம்பத்தில் மனிதனைப் (பார்ப்பது) போல. அதில் உயிரின் உண்மையான நிலை அறியப்படும்பொழுது, உயிர்த் தன்மை நீங்குகின்றது.

ஒரு கம்பத்தை மனிதனுக நினைத்துவிடுவது போல, மெய்ப்பொருளைச் சிற்றுயிராக எண்ணி விடுகிறோம். "இது மனிதனன்று" என்று மறுத்து கம்பம் என்று நிச்சயப் படுத்திக்கொள்வதுபோல, சிற்றுயிர்த்தன்மையை மறுத்து, மெய்ப்பொருள் நிலையை நம் நிலையாக உணரவேண்டும்.

## 46. மெய் பொய்மை அகற்றும்

தத்த்வ-ஸ்வரூப-அநுபவாத்
உத்பன்னம் ஞானம் அஞ்ஜஸா
அஹம் மம இதிச அஞ்ஞானம்
பாததே திக்-ப்ரமாதிவத்

*தத்த்வ - உண்மையின், ஸ்வரூப - தன்மையை, அநுபவாத் - உணர்வதால், உத்பன்னம் - உண்டான, ஞானம் - மெய்யறிவு, அஞ்ஜஸா - உடனுக்குடன், அஹம் - 'நான்', மம - 'எனது', இதி - என்ற. அஞ்ஞானம் - அறியாமையை, பாததே - அழிக்கிறது. திக்ப்ரமா - திக்பிரமை, ஆதி - முதலியவற்றை, வத் - போல.*

உண்மை நிலையை உணர்ந்ததால் உதிக்கின்ற மெய்யறிவு, "நான்" "எனது" என்ற அறியாமை யையும் அக்கணமே அழித்துவிடுகிறது, (சூரியோத யத்தினுல்) திக்பிரமை முதலியவை (நீங்குவது) போல.

"நான்" என்று ஒரு மனிதன் தன்னைத் தனித்துச் சுருக்கி பிறரிடமிருந்து வேறுபடுத்தி வேலி கட்டி எல்லை வகுத்துக்கொள்கிருன். "நான்", "நீ", "எனது", "உனது" என்ற உரிமைகளும் பிளவுகளும் உண்டாகின்றன. உலக விவகாரச் சிக்கல்களுக்கும், இன்ப துன்பப் போராட்டங் களுக்கும் இந்த "நான்" அடிக்கல்லாகும். இந்த "நான்" என்பது ஒரு போலி. வேற்றுமைகளொன்றுமே இல்லாமல்,

எல்லாவற்றிற்கும் உட்பொருளாய் இருக்கும் மெய்ப் பொருள்தான் உண்மையான "நான்". இந்த "நான்" எல்லாவற்றையும் தன்னுள்ளும், தன்னை எல்லாவற்றிலும் ஒன்றாக வெளிப்படுத்தி மகிழும். போலி "நான்" தன்னை ஒதுக்கிக் கொண்டு உரிமைகள் கொண்டாடிப் போருக்குத் தயாராக நிற்கும். உண்மையான "நான்" எல்லாவற்றையும் ஒருமைப்படுத்தி ஒற்றுமைக்கு வழிகாட்டும்.

இங்கு தரப்பட்டிருக்கும் உதாரணம் திக்பிரமை. இருட்டில் திக்குத்திசை தெரியாமல் அலைந்து கொண்டிருக்கும் ஒருவன், சூரியன் உதயமானவுடன், சூரியன் உதிக்கும் திக்கு கிழக்கு ஆதலால் அதை வைத்துத் திக்கைக் கண்டுபிடிக்கிறான். தான் போக வேண்டிய இடத்தையும் சென்று அடைகிறான்.

இதுபோல, மெய்யறிவு உண்டானவுடன் எது உண்மை என்று தெரியாததால் ஏற்பட்ட கலக்கங்களும், திகைப்புக்களும் நீங்குகின்றன. ஒருவனைக் கண்ணைக் கட்டிக் காட்டில் கொண்டுபோய் விட்டுவிட்டார்கள் திருடர்கள். அவன் நல்ல புத்திசாலிதான். ஆயினும் காட்டிலே திக்குத்திசை தெரியவில்லை. நல்ல வேளையாக காட்டின் வழிதெரிந்த வழிபோக்கன் அவனுக்குப் பாதைகளைச் சொன்னான். அதன்படி நடந்து தன் நாட்டுக்குப் போய்ச் சேர்ந்தான் என்று சாந்தோக்கிய உபநிஷத்தில் ஓர் உவமை தரப்படுகிறது.

இது போல உண்மை தெரியாமல் இருக்கின்ற மனிதன் குருவின் உபதேசத்தினால் தெளிவு பெற்றுத் தானும் உண்மையறிந்து கடைத் தேறுகிறான் என்று **சாந்தோக்கிய உபநிஷத்** சொல்லுகிறது.

## 47. எல்லாம் தன்னுள்ளே

ஸம்யக் - விஞ்ஞானவான் - யோகீ
ஸ்வாத்மனி ஏவ அகிலம் ஸ்திதம்
ஏகம் ச ஸர்வம் ஆத்மானம்
ஈக்ஷதே ஞான சக்ஷுஷா

*ஸம்யக் - உண்மையான, விஞ்ஞானவான் - அறிவை உடைய, யோகீ - யோகி, அகிலம் - எல்லாவற்றையும், ஸ்வாத்மனி ஏவ - தன்னிடத்திலேயே, ஸ்திதம் - இருப்பதாகவும், ஏகம் - ஒன்றான, ஆத்மானம் - தன்னை, ஸர்வம் ச - எல்லாமாகவும், ஞான சக்ஷுஷா - மெய்யறிவுக் கண்ணினால், ஈக்ஷதே - பார்க்கிறான்.*

மெய்யறிவு பெற்ற யோகி எல்லாம் தன்னுள் இருப்பதையும் எல்லாமுமான ஒரே மெய்ப் பொருளையும் மெய்யறிவுக் கண்ணினால் பார்க்கிறான்.

இங்கே கூறப்படும் யோகம் ஜீவ-ப்ரஹ்ம-அபேத-யோகம். அதாவது, உயிரும் பரம் பொருளும் ஒன்றாகிவிட்ட நிலை.

களி மண்ணை நன்றாகத் தெரிந்து கொண்டுவிட்டால் அதனால் செய்யப்பட்ட பொருள்களையெல்லாம் தெரிந்து கொண்டதாக ஆகிவிடும். பானை, சட்டி என்பதெல்லாம் வெறும் பெயர்கள் தான்; அவற்றிலுள்ள களிமண் என்ற காரணப் பொருள் தான் உண்மை.

இது போல, எல்லாவற்றிற்கும் காரணமாக இருக்கின்ற மெய்ப்பொருள் ஒன்றைத் தெரிந்துகொண்டால் எல்லாம் தெரிந்ததாக ஆகும். இதன் உட்கருத்து என்னவென்றால், தெரிந்து கொள்வதற்கோ, பார்ப்பதற்கோ வேறு எதுவுமே இருக்காது. எல்லாம் மெய்ப் பொருளாகவே காணப்படும். பார்க்குமிடந் தொறும் நீக்கமற நிறைந்திருக்கும் அந்த சத்தியப் பொருள் ஒன்றே தெரியும்.

உப்புத் தண்ணீரில் எந்தப் பகுதியும் உப்புக் கரிப்பது போல, வெல்லத்தால் செய்த பிள்ளையாரில் எந்தப் பகுதியும் இனிப்பாக இருப்பதுபோல, உலகமனைத்தும் மெய்ப்பொருள் வடிவமாகவே இருக்கும். "உண்ணும் சோறு, தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன்" என்று ஆழ்வார்கள் உணர்ந்தார்கள். நீலவானத்தைப் பார்த்தால் கண்ணனின் கருநீல வண்ணம் கண் முன் வரும். மண்ணைப் பார்த்தால் வாமனன் அடி வைத்து அளந்த இடம் இது என்ற நினைவு வரும்.

தாயுமானவர் பூசைக்கு மலர் எடுக்கச் சென்றார். ஆனால் மலரைக் கொய்யப் போகும் தருணத்தில் அம் மலரிலும் இறைவன் காட்சி தருவதைக் கண்டார்; அப்படியே நின்றுவிட்டார். மலரைப் பறிக்கவில்லை, பூசையும் பண்ணவில்லை. "பனி மலரும் நீயே இருத்தி" என்று வியந்து "பண்ணேன் உனக்கான பூசை; நன் மலரெடுக்கவும் நண்ணேன்" என்று உள்ளமுருகினார்.

"உயர்குலத்தோர், பசுமாடு, யானை, நாய், பன்றி எல்லாவற்றையும் வேற்றுமை ஏதுமின்றிச் சமமாகக் காண்கின்றவன் மெய்யறிவாளன்" என்று பகவத் கீதை பேசுகின்றது. "பிறர்க்கு வந்த இன்பம் தனக்கு வந்ததுபோல மகிழ்ந்து, பிறர்க்கு வந்த துன்பம் தனக்கு வந்தது போல வருந்தி, தன்னுயிர் போல் மன்னுயிரையும் நினைப்பார்கள் இந்த மெய்யறிவாளர்கள்; ஏனெனில் எல்லாம் ஒன்றே என்ற உண்மையை உணர்ந்தவர்கள் இவர்கள்" என்றும் பகவத் கீதை சொல்லுகின்றது.

கண்ணாடிக்குள் தெரியும் பிரதிபிம்பம் வெளியே இருப்பது போலத் தெரிகிறது. இதுபோன்று, தனித்தனி யாக புறத்தே காணப்பட்டாலும், எல்லாப்பொருள்களும் மெய்ப்பொருளில் அடங்கும்.

## 48. எல்லாம் மெய்ப்பொருளே

ஆத்மா ஏவ இதம் ஜகத்-ஸர்வம்
ஆத்மனோ அன்யத் நகிஞ்சன
ம்ருதோ யத்வத் கடாதீனி
ஸ்வாத்மானம் ஸர்வம் ஈக்ஷதே

*இதம் - இந்த, ஸர்வம் - எல்லா, ஜகத் - உலகமும், ஆத்மா ஏவ — மெய்ப்பொருளேயாகும். ஆத்மன:- மெய்ப்பொருளை, அன்யத் - தவிர, ந கிஞ்சன - வேறொன்றுமில்லை. யத் - எந்த, கடஆதீனி - பானை முதலியவை, ம்ருத:- மண்ணை விட (வேறில்லையோ, அதைப் போல) ஸர்வம் - எல்லாவற்றையும், ஸ்வாத்மானம் - தனது வடிவமாக, ஈக்ஷதே - பார்க்கிறான்.*

இவ்வுலக மனைத்தும் மெய்ப் பொருளே யாகும். மெய்ப் பொருளைத் தவிர வேறு ஒன்றும் இல்லை. களிமண்ணால் ஆன பானை முதலியவற்றைப் போல, எல்லாவற்றையும் தானாக (மெய்யறிவாளன்) பார்க்கின்றான்.

களிமண்ணால் செய்யப்பட்டிருக்கும் பானை முதலியவற்றில் களிமண் உபாதான காரணம் என்று முதலிலேயே பார்த்தோம். இதே போல் உலகிற்கு உபாதான காரணம் மெய்ப்பொருளே யாகும். பானையின் உருவம், பெயர் முதலியவை யெல்லாம் பெயரளவில்தான். அந்தப் பாண்டங்கள் களிமண்ணின் இயற்கையை உடையனவாகத்தான் இருக்கும்.

இதுபோல, மற்ற எல்லாம் மாறினாலும், மெய்ப் பொருள் மாறாது உலக மனைத்திலும் மெய்ப்பொருளின் இயற்கையே அடிப்படையில் ஊடுருவி நிற்கும்.

மெய்ப்பொருள் அஸ்தி, (இருக்கிறது) பாதி (விளங்குகிறது) ப்ரியம் (அன்பிற்குரியது) என்ற இயற்கை யுடை-

யது. ஸத், சித், ஆனந்தம் என்றும் இதைச் சொல்லுகின்றோம்.

"இருக்கின்றது" (அஸ்தி) என்று சொல்லக்கூடியது மெய்ப்பொருள் ஒன்று தான். பாக்கி எல்லாம் இருப்பது போலத்தோன்றும், அவ்வளவு தான். நாம் பார்க்கின்ற எல்லாவற்றிலும் "இருக்கிறது" என்பது மாருமல் இருப்பதைக் காணலாம். யானையும் 'இருக்கும்'; பானையும் 'இருக்கும்', யானையும் பானையும் வேறு; ஆனாலும் 'இருக்கிறது' என்பது பொது. பானையை மட்டுமே எடுத்துக் கொண்டாலும், அதன் வடிவம் தேய்ந்து மாறலாம், அது உடைந்து அழிந்தும் போகலாம். ஆயினும் அதன் காரணப் பொருளான களிமண் இருந்து கொண்டு தான் இருக்கும். களிமண்ணையும் உடைத்து அணுக்களாக்கலாம். அப்பொழுதும் அணுக்கள் இருக்கத்தான் இருக்கும். அணுக்களும் மாறலாம்; ஆனால் ஏதோ ஒரு வடிவில் ஏதாவது "இருந்து" கொண்டுதான் இருக்கும். இப்படி "இருப்பது" என்பது மெய்ப்பொருள். "மாறுவது" என்பது பொய்ப்பொருள். மாறினால் தன்னிலை போய் விட்டது என்று அர்த்தம். உண்மையில் தன்னிலை போக முடியாது. தன்னிலை அழிந்தால் பாழ், சூனியம் என்று ஆகிவிடும். ஒரு குறிப்பிட்ட உருவமும் அதற்கேற்ற பெயரும் போய் விட்டது என்று வேண்டுமானால் சொல்லலாம். உருவமும் பெயரும் தன்னிலை உடையனவாக இருந்தால் போகாது; ஆனால் அவை போய் விடுகின்றன. ஆகையால் அவை தோற்றங்கள். ஆனால் தோன்றுவதற்கும் ஏதேனும் பிடிப்பு வேண்டும். "எதனுடைய தோற்றம்?" என்று கேட்க முடியும். மெய்ப் பொருளின் தோற்றம் என்று தான் கூற வேண்டும். "இல்லாதது வராது; இருப்பது அழியாது" என்பது கீதை. தோற்றம் அழிவதால், மாறுவதால் அது

இருப்பது அன்று; இல்லாதது வராது ஆதலால் அது சூனியமான இல்பொருளுமன்று. அது இரண்டுங் கெட்டான் நிலையிலுள்ள மாயை. ஆகவே மாறுமல் என்றுமுள்ள மெய்ப் பொருள்தான் "இருக்கிறது" (அஸ்தி) என்று கூறமுடியும்.

மெய்ப் பொருள்தான் தோன்ற முடியும். ஏனெனில் அது அறிவு வடிவமானது, ஜடப்பொருள் தன்னையும் அறியாது; பிறவற்றையும் அறியாது. எனவே மெய்ப் பொருள் ஒன்று தான் தோன்ற முடியும். உலகம் தோற்ற அளவிலேனும் காணப்படுகின்றபடியால் அது உண்மையில் மெய்ப் பொருளின் ஒரு தோற்றம் என்று ஏற்படுகிறது.

மூன்முவதாக, மெய்ப்பொருள் பேரின்ப வடிவமாக எல்லாவற்றிலும் ஒன்றாக இருப்பதால், அது அன்புக்குரியதாக ஆகிறது. "உலகில் அன்பிற்குரியதாக இருப்பதெல்லாம் மெய்ப் பொருளின் இன்பவடிவம்" என்று யாக்ஞவல்கியர் மனைவி மைத்ரேயிக்குச் சொன்னதாக பிருஹதாரண்யக உபநிஷத் சொல்லுகின்றது.

இவ்வாறு அஸ்தி (இருக்கிறது) பாதி (விளங்குகின்றது) ப்ரியம் (அன்புக்குரியது) என்ற மூன்றும் உலகத்தின் அடிப்படைகள். பெயர் (நாமம்) வடிவம் (ரூபம்) இரண்டும் மாயாதோற்றங்கள். இந்த ஐந்தும் கலந்ததுதான் உலகம். ஆகவே பிரபஞ்சம் எனப் பெயர் பெறுகின்றது. இதில் கடைசி இரண்டைத் தள்ளிவிட்டு, முதல் மூன்றை எடுத்துக் கொள்வதுதான் மெய்யறிவு. இந்த மெய்யறிவை உடையவர்கள் பெரியவர்கள்.

## 49. ஜீவன் முக்தி

ஜீவன் முக்திஸ்து தத்வித்வான்
பூர்வ-உபாதி குணன் த்யஜேத்
ஸ ஸத்-சிதாதி-தர்மத்வம்
பேஜே ப்ரமரகீட வத்.

*ஜீவன் - உயிருடனிருக்கும் போதே, முக்தி - விடுதலை, து - என்பதோ, தத் - அந்த, (மெய்ப் பொருளை) வித்வான் - அறிந்தவன், பூர்வ - முன்னர் ஏற்பட்ட, உபாதி - தடைகளையும், குணன் - அவற்றின் குணங்களையும், த்யஜேத் - விட்டு விடுகின்ற (நிலையாகும்). ஸ - அந்த, (ஜீவன் முக்தன்) ஸத் - உண்மை, சித் - பேரறிவு, ஆதி - முதலிய, தர்மத்வம்-இயல்பினை உடைமையை, பேஜே- அடைகின்றன், கீட - புழுவானது, ப்ரமர - குளவி, (ஆவது) வத் - போல.*

**ஜீவன் முக்தி (உடலில் வாழும் பொழுதே முக்தி பெறுவது) என்பது வருமாறு: மெய்யறிவாளன் தனது முந்தைய தடைகளையும் அவற்றின் இயல்புகளையும் விட்டு விடவேண்டும்; ஸத் சித் முதலிய இயல்புகளைத் (திரும்பப்) பெற வேண்டும், குளவியாக மாறும் புழுவைப் போலே.**

குளவியை நினைந்து பயந்து குளவியின் நினைவாகவே இருப்பதனால், புழு நாளடைவில் குளவியாக மாறி விடுகின்றது என்பது நூலோர் துணிபு. அதுபோல "நான் மெய்ப்பொருள்; நான் உடலன்று, உள்ளமன்று; மனமன்று," என்று எப்பொழுதும் சிந்தித்திருந்தால், நாளடைவில் ஒருவன் மெய்ப் பொருளாகவே ஆகிவிடுகின்றான். இது இந்த உடல் வாழ்க்கையிலேயே பெறக் கூடிய பேறு ஆகும். செத்த பின் வரும் நிலை யன்று. இதனால் தான் வேதாந்தத்தின் பயனைக் கண்கண்டபயன் (திருஷ்ட-பலம்) என்பார்கள். இது எப்போதோ ஒரு நாள் சுவர்க்கத்தில் பெறும் இன்பமன்று. இல்லாத ஒன்றைப் பெறுவதோ, வேறொரு இடத்திற்குப் போவதோ அல்ல முக்தி. இங்

கேயே இப்பொழுதே பொய்யறிவை நீக்கி மெய்யறிவைப் பெற்று நிற்பதே முக்தியாகும்.

இதற்கு உடல் ஒரு தடையில்லை. இன்னும் சொல்லப் போனால், இந்த உடல் இருக்கும் பொழுதுதான், நம் முடைய அறிவைக் கொண்டுதான் குருவினிடத்து மெய்ந் நூல்களைப் பயின்று, உண்மையை அறியவேண்டும். ஆகவே இந்த உடலும் அறிவும் ஆண்டவன் அளித்த பெரும் வாய்ப்புக்களாகும்.

மனிதனை மூவகை வினைகள் தொடர்கின்றன: (1) ஸஞ்சிதம் (2) பிராரப்தம் (3) ஆகாமி. பலப்பல பிறவி களில் செய்த வினைகளின் மூட்டை ஸஞ்சிதம் எனப்படும். இவ்வினைகளில் ஒரு பகுதி தன் பயனைக் கொடுக்கத் தொடங்கியதன் விளைவுதான் இந்த உடம்பு. பயனைக் கொடுக்கத் தொடங்கிவிட்ட வினைகள் பிராரப்தம் எனப் படும். இதை அநுபவித்துத்தான் தீர்க்கவேண்டும். வில்லி லிருந்து விட்ட அம்பு தானாக வேகம் குறைந்துதான் தரை யில் விழும். அதுவரையில் பொறுத்திருக்கத்தான் வேண்டும்.

அதுபோல இந்த உடம்பும் பிராரப்த வினைகள் தீரும் வரை இருக்கத்தான் செய்யும். எனவே, மெய்யுணர்வு பெற்ற ஜீவன்முக்தனுக்கு உடல் வாழ்க்கை, இந்தப் பிராரப்தம் தீரும்வரை இருக்கத்தான் செய்யும். ஜீவன் முக்தன் இது தெரிந்து உடலைப் பற்றிக் கவலை கொள்ள மாட்டான். அவனைப் பொறுத்தமட்டில் உடல் இறந்து விட்ட ஒன்று. "மௌனத்தை யுற்று, எல்லாம் ஒருங்கிய நிர்க்குணம் பூண்டு, என்னை மறந்திருந்தேன்; இறந்தே விட்டது இவ்வுடம்பே" என்று அருணகிரிநாதர் சொன்னது இம் மெய்யுணர்வைத்தான்.

ஆகாமி என்பவை வருவினைகள். இவை மெய்யறிவினால் அடிபட்டுப் போய் விடுகின்றன என்று சொல்லவே வேண்டியதில்லை.

பாம்பு சட்டையைக் கழற்றி எறிந்து விடுவது போல, பழைய சிறுமைகளை எல்லாம் களைந்து விடவேண்டும். பிராரப்த வினைகள் தீர்ந்தவுடன் உடலும் விழுந்து விடும். அப்பொழுது விதேக முக்தன் எனப்படுகிறான். மெய்ஞ்ஞானத்தினால் வரும் உடனடியான முக்தி ஸத்யோ முக்தி எனப்படும். உயிர் வாழும் பொழுது இதைப் பெறுவதால் அது ஜீவன் முக்தி என்று சொல்லப்படுகிறது.

நல்வினைகள் செய்து, அல்லது உபாஸனைகள் செய்து, பல உயர்ந்த உலகங்களுக்கு முறையே சென்று, கடைசியில் படைப்புக் கடவுளின் உலகமான ஸத்திய லோகத்துக்குச் சென்று, அங்கு மெய்யறிவு பெற்று முக்தி அடையலாம். இது படிப்படியாக நிகழ்வதால் இது கிரம முக்தி எனப்படும்.

## 50. ஆத்மா ராமன்

தீர்த்வா மோஹார்ணவம் ஹத்வா
ராக-த்வேஷாதி ராக்ஷஸான்
யோகீ சாந்தி-ஸமாயுக்த:
ஆத்மாராமோ விராஜதே

மோஹ - மோகம் என்ற, அர்ணவம் - கடலை, தீர்த்வா - கடந்து, ராக - விருப்பு, த்வேஷ - வெறுப்பு, ஆதி - முதலிய, ராக்ஷஸான் - அரக்கர்களை, ஹத்வா - கொன்று, சாந்தி - அமைதியோடு, ஸமாயுக்த: - நன்கு பொருந்தி, ஆத்மா - தன்னிடத்திலேயே, ராம:- இன்புற்று, யோகீ - யோகி, விராஜதே - விளங்குகின்றான்.

மருட்கடலைத் தாண்டி, விருப்பு வெறுப்பு என்ற அரக்கர்களைக் கொன்று, அமைதியுடன் கூடிய யோகி தன்னிடத்திலேயே மகிழ்பவனாய் விளங்குகிறான்.

சக்ரவர்த்தித் திருமகனான ஸ்ரீராமன் கடல் கடந்து ராவணன் முதலிய அரக்கர்களைக் கொன்று, பிராட்டியைச் சிறை மீட்டு, செய்வினை முடித்த செல்வனாக இன்புற்றிருந்தான் என்பது ராமாயணம்.

இங்கு ஆத்மாராமன் பேசப்படுகின்றான். மெய்ப் பொருளாகவே தான் இருப்பதை உணர்ந்த யோகி தன்னிடத்திலேயே இன்புறுகின்றான். இவன் கடந்தது வெறும் நீர்க் கடலன்று; மருட்கடல். இவன் கொன்றது விருப்பு வெறுப்பு என்ற அரக்கர்களை. இவன் பெற்றது அமைதியை. இவன் ஆண்டது ஆத்ம-ஸ்வாராஜ்யத்தை.

சீதையை உயிராகவும் ஸ்ரீராமனைப் பரம் பொருளாகவும் அநுமனைக் குருவாகவும் உருவகப் படுத்திக் கூறுவதுண்டு. உயிரைப் பரம்பொருளிடத்துச் சேர்ப்பிப்பது குரு அல்லவா? அனுமன் ராமனைப்பற்றிச் சீதைக்குச் சொல்லி. சீதையைப் பற்றி ராமனுக்கு அறிவித்து, இருவரையும் இணைத்து வைத்தான் அல்லவா? "அனுமன்" என்றால் அறிவாளன் என்றும் பொருள் உண்டு.

## 51. பற்று விடல்

பாஹ்ய-அநித்ய-ஸுக-ஆஸக்திம்
ஹித்வா ஆத்ம-ஸுக-நிர்வ்ருத:
கடஸ்த-தீபவத்-சச்வத்
அந்தரேவ ப்ரகாசதே

*பாஹ்ய - வெளியிலிருக்கும், அநித்ய - அழியக்கூடிய, ஸுக - இன்பத்தில், ஆஸக்திம் - பற்றை, ஹித்வா - விட்டு விட்டு, ஆத்ம -*

தன்னிடத்திலேயே, ஸுக - இன்பத்தில், நிர்வ்ருத:- திளைத்தவனாய், சச்வத் - எப்பொழுதும், அந்தர் ஏவ - உள்ளுக்குள்ளேயே, கடஸ்த - பானைக்குள்ளிருக்கும், தீப - விளக்கை, வத் - போல, ப்ரகாசதே - விளங்குகிறான்.

**புறத்தே உள்ள நிலையாத இன்பத்தின் பற்றை விட்டு, தன்னிடத்திலேயே மகிழ்பவனாய், எப்பொழுதும் உள்ளே விளங்கிக் கொண்டிருக்கிறான், குடத்தில் வைத்த விளக்கைப் போல.**

இன்பங்கள் வெளியிலிருந்து வருகின்றன என்று எண்ணி அத்தகைய இன்பத்துக்கான பொருள்களை நாடிச் செல்வது தவறு. மெய்ப்பொருள் ஆனந்த வடிவமானது. இந்த ஆனந்தத்திலிருந்துதான் உலகம் தோன்றியிருக்கின்றது. உலகத்து இன்பங்கள் எல்லாம் இந்தப் பேரின்பத்தின் திவலைகள் தாம். உலகத்தின் இன்பங்கள் நிலைத்தவை அன்று. சேர்க்கையால் உண்டாவதால் சேர்க்கையற்றுப் போனவுடன் இன்பமும் போய்விடும். அதனால் துன்பம் தான் மிஞ்சும். இன்பத்தைக் காப்பாற்றிக் கொள்ளச் செய்யும் முயற்சியும் வீண். இதனால் மேலும் துன்பந்தான் உண்டாகும். இத்தகைய இன்பத்தைப் பெற முயல்வதும் துன்பமாகத் தான் இருக்கிறது.

நம்முடைய உண்மை நிலையே பேரின்பம். நாம் நாமாக இருப்பது தான் பேரின்பவீடு. இரண்டற்ற மெய்ப்பொருளாக நாம் இருக்கும் போது அங்கு பேரின்பமும் முழுமையாகத் தான் இருக்கும். இதை யறியாமல் இன்பத்தை வெளியே தேடுவது பேதைமை.

தன் காலுக்கடியில் பெரும் நிதியம் புதையலாகக் கிடப்பது அறியாமல், அதன் மேல் எத்தனையோ தடவை நடந்து போய் வந்து கொண்டிருந்தும், அது தெரியாமல் தன்னை ஏழையாகவே நினைத்துக் கொண்டிருக்கும்

மனிதனின் நிலை இது என்று சாந்தோக்கிய உபநிஷத் கூறு கின்றது.

நல்ல இளமையும், கல்வியும் ஆற்றலும் பெற்ற ஓர் அரசனுக்குக் கிடைக்கும் இன்பம் ஒன்று என்று எண் ணிக்கை வைத்தால், தன்னிலை இன்பம் இதைப் போல பதினுயிரம், நூருயிரம் மடங்கு அதிகம் என்று தைத்திரீய உபநிஷத் கூறுகின்றது.

ஒரு ஜீவன்முக்தனுடைய நிலையைச் சொல்லுகின்ற பாடல் இது. உடலுக்குள் எத்தகைய பேரின்பத்தை அவன் உணர்கிருன் என்பது அவனுக்குத் தான் தெரியும். குடத்துக்குள் இருக்கும் விளக்கு உள் நின்று ஒளிர்வது போல, மெய்யுணர்ந்தவனின் உள்ளொளி அமைதியாகச் சுடர் விட்டு ஒளிர்கிறது. ஆனால் ஜீவன்முக்தன் என்று ஒருவன் இல்லையென்ருல், இப்படி ஓர் ஆனந்தம் இருப்பதும், அதை உணர்வதும் தெரியாமலே போய்விடும். எத்தனை நூல்கள் படித்தாலும் நமக்கு நம்பிக்கை வராது. ஜீவன் முக்தனுடைய பேருணர்வு மனித சமுதாயத்துக்குப் பயன் படுவதற்காகத்தான் அவன் உடலில் வாழ்கிருன், "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்றும் "சேர வாரும் ஜகத்திரே" என்றும் அவன் எல்லோருடனும் இந்தப் பேரின்பத்தைப் பகிர்ந்து கொள்கின்ருன்.

## 52. ஒன்றிலும் ஒட்டாத மெய்வாழ்வு

உபாதிஸ்த்தோபி தத்-தர்மை:
அலிப்தோ வ்யோமவன் முனி:
ஸர்வவித்-மூடவத்-திஷ்ட்டேத்
அஸக்தோ வாயுவத் சரேத்

முனி - மெய்யுணர்ந்த பெரியவன், உபாதிஸ்த:- உபாதிகளுடன் கூடியவனாக அபி - இருந்தாலும், தத் - அவற்றின், தர்மை:- இயல்புகளினால் அலிப்த:- கவரப்படாதவனாக, வ்யோம - ஆகாயத்தை, வத் - போல (இருக்கிறான்). ஸர்வ - எல்லாவற்றையும், வித் - அறிந்தவனாக இருந்தாலும், மூட வத் - மூடனைப் போல, திஷ்டேத் - இருக்கிறான். வாயுவத் - காற்றைப் போல, அஸக்தோ - ஒன்றிலும் பட்டுக் கொள்ளாதவனாக, சரேத் - நடக்கிறான்.

தடைகள் நடுவில் இருந்தாலும் ஒரு முனிவன் அவற்றின் குணங்களால் பாதிக்கப்படுவதில்லை, ஆகாயத்தைப் போல. எல்லாம் தெரிந்திருந்தும், மூடனைப் போல வாழ்ந்து, காற்றைப் போல ஒன்றிலும் ஒட்டாமல் நடக்கவேண்டும், நடக்கிறான்.

ஆகாயம் எல்லையில்லாதது; நிர்மலமானது. அதைப் போல உண்மை உணர்ந்த உள்ளமும் எங்கும் நிறைந்திருக்கின்றது. காற்று நினைத்த இடத்தில் வீசும். அதைப் போல, மெய்யறிவாளன் தன்னிச்சைப்படி நடப்பான்.

உண்மை யறிந்தவனையும் மூடனையும் தோற்றத்தில் பிரித்தறிவது மிகவும் கடினம். ஞானி ஜடவஸ்துவைப் போல் உலகில் சுற்றித்திரிவான். பரதர் என்ற முனிவருக்கு இதனால் ஜடபரதர் என்றே பெயர் ஏற்பட்டது என்பது ஸ்ரீமத் பாகவதத்தில் கூறப்பட்டிருக்கிறது.

பித்தனைப் போல் பேயனைப் போல் உலவி வருபவரும் உண்டு. "உருவு கண்டு எள்ளாமை வேண்டும்" என்று திருவள்ளுவர் எச்சரித்ததும் இவர்களைப்பற்றித்தான். இத்தகைவர்கள்தான் உலகிற்கு அச்சாணி என்பார் வள்ளுவர்.

## 53. மெய்ப் பொருளோடு கலத்தல்

உபாதி-விலயாத் விஷ்ணௌ
நிர்விசேஷம் விசேத் முனி:
ஜலே ஜலம் வியத் வ்யோம்னி
தேஜஸ் தேஜஸி வா யதா

உபாதி-தடைகள், விலயாத்-நீங்கும் பொழுது, முனி:-மெய்யுணர்ந்த பெரியோன், நிர்விசேஷம் - வேற்றுமைகள் அற்ற, விஷ்ணௌ - மெய்ப்பொருளில், விசேத் - சேருகிறான். யதா - எப்படி, ஜலே - நீரில், ஜலம் - நீரும், வ்யோம்னி - ஆகாயத்தில், வியத் - ஆகாயமும், வா - அல்லது, தேஜஸி - ஒளியில், தேஜ:- ஒளியும் (சேர்ந்து ஒன்றுகின்றனவோ அதுபோல).

தடைகள் எல்லாம் நீங்கியவுடன், ஒரு முனிவன் (மெய்யுணர்ந்த பெரியோன்) வேற்றுமைகளற்ற எங்கும் நிறைந்த மெய்ப்பொருளை அடைகிறான், நீர் நீருடனும், ஆகாயம் ஆகாயத்துடனும், நெருப்பு நெருப்புடனும் (ஒன்றுதல்) போல.

ஒரு குடத்திலிருக்கும் ஆகாயமும், குடத்துக்கு வெளியிலிருக்கும் ஆகாயமும் ஒன்றே யாயினும், குடம் அதைத் தடுத்து நிற்பதால் வேறானது போல் தோற்றம் கொள்கிறது. குடத்தை உடைத்து விட்டால், அப்பொழுது உள்ளும் புறமும் ஆகாயவெளி ஒன்றுவதைப் பார்க்கிறோம்.

தண்ணீருக்குள் ஒரு செம்பை அமிழ்த்தி அதைத் தண்ணீருக்குள்ளேயே நகர்த்தினால், செம்பிலிருக்கும் தண்ணீர் ஏதோ தனியே வருவது போல் தோன்றும். செம்பைக் கவிழ்த்து விட்டால், எல்லாத் தண்ணீரும் ஒன்றாகிவிடும்.

நெருப்பிலிருந்து தெறிக்கும் பொறி அந்நெருப்பினின்றும் வேறன்று. இது போல, உயிரும் மெய்ப்பொரு

ரும் ஒன்ருகவே இருக்கின்றன. மேற் சொன்ன எல்லா எடுத்துக் காட்டுகளிலுமே, இரண்டாக இருந்து பின் ஒன்ருவதில்லை. ஒன்ருகவே இருந்து, சில தடைகளினுல் இரண்டாகத் தெரிகின்ற தோற்றம் தான் காட்டப் படுகிறது.

## 54. மெய்ப்பொருளே உயர்ந்த பேறு

யத் லாபாத் ந அபரோ லாப:
யத் ஸுகாத் ந அபரம் ஸுகம்
யத் ஞானுத் ந அபரம் ஞானம்
தத் ப்ரஹ்ம இதி அவதாரயேத்

*யத் - எதனை, லாபாத் - அடைவதைவிட, அபரோ - வேறு, லாப:- லாபப், ந-கிடையாதோ, யத்-எந்த, ஸுகாத்-இன்பத்தை விட, அபரம்-வேறு, ஸுகம் - இன்பம், ந - கிடையாதோ, யத் - எதன், ஞானுத் - அறிவைக் காட்டிலும், அபரம் - வேறு, ஞானம் - அறிவு, ந - கிடையாதோ, தத் - அதை, ப்ரஹ்ம - பிரம்மம், இதி - என்று, அவதாரயேத்-உறுதியாக அறிக.*

எதனைப் பெறுவதைக் காட்டிலும் பெரிய லாபம் வேறு ஒன்றும் இல்லையோ, எந்த இன்பத்தைக் காட்டிலும் பெரிய இன்பம் வேறொன்று மில்லையோ, எதன் அறிவைக் காட்டிலும் பெரிய வேறு அறிவு ஒன்று மில்லையோ அதுவே மெய்ப் பொருள் என்று உறுதியாக அறிக.

மெய்ப்பொருளை உணர்வதுதான் பெரும் பேறு. தன்னைத்தானறிவதுதான் வாழ்வின் பெரும் பயன். எல்லாத் துன்பங்களுக்கும் முடிவான இடம் அது. எல்லையில்லாப் பேரின்பம் அது. அதனுல் அது பரம புருஷார்த்தம் எனப் படுகிறது. மனிதனுல் விரும்பப்படும் பெரும் பேறு என்று பொருள். நாம் நாமாக இருக்கும் நிலையை விரும்பாம லிருக்க முடியுமா?

மெய்ப்பொருள் இரண்டற்றதாயிருப்பதால் அதுவே இன்பம். ஸனத்குமாரர் நாரதருக்கு இதை எடுத்துரைத்தார். துக்கத்தை அடியோடு வேரறுக்க மெய்ப்பொருளை யறிவது ஒன்றே வழி. அது ஒன்றே அறிவு என்ற பெயருக்குத் தகுந்தது. அதைத் தவிர மற்றதெல்லாம் பொய் யறிவாகும்.

வாழ்வின் எல்லை நிலமாகவும், அறிவாகவும் இன்பமாகவும் இருக்கிறது இந்த மெய்ப்பொருள். இதைப் பெற முயலுவதுதான் அறிவுடைமை யாகும். இதைவிட வேறொரு பேறு இல்லை.

## 55. அறியவேண்டியது மெய்ப்பொருளே

**யத் த்ருஷ்ட்வா ந அபரம் த்ருச்யம்**
**யத் பூத்வா ந புனர்பவ:**
**யத் ஞாத்வா ந அபரம் ஞேயம்**
**தத் ப்ரஹ்ம இதி அவதாரயேத்**

*யத் - எதை, த்ருஷ்ட்வா - பார்த்தபின், அபரம் - வேறு, த்ருச்யம் - பார்க்கப்பட வேண்டியது, ந - இல்லையோ, யத் - எதாக, பூத்வா - ஆகி விட்ட பின், புன:-மறுபடியும், பவ:-பிறப்பு, ந - இல்லையோ, யத் - எதை, ஞாத்வா - அறிந்தபின், அபரம் - வேறு, ஞேயம் - அறிய வேண்டியது, ந - இல்லையோ, தத் - அதை, ப்ரஹ்ம-மெய்ப்பொருளான ப்ரஹ்மம், இதி - என்று, அவதாரயேத் - உறுதியாக அறிக.*

*எதைக் கண்டபின் பார்க்க வேண்டியது வேறொன்றுமில்லையோ, எதாக ஆனபின் மறுபடி பிறப்பில்லையோ, எதை அறிந்த பின் அறிய வேண்டியது வேறொன்றுமில்லையோ அதை மெய்ப் பொருள் என்று உறுதியாக அறிக.*

மெய்ப்பொருளைக் கண்டபின் தோற்ற மாயைகள் யாவும் அழிந்து விடுவதால் பார்க்கப்படும் பொருள்

யாதொன்றுமில்லை. கனவிலிருந்து விழித்துக் கொண்டவுடன் கனவுப் பொருள்கள் மாயமாய் மறைந்து விடுகின்றதைப் பார்க்கிறோம். அறியாமை தான் பிறவிக்குக் காரணம். அது மறைந்து விட்டபின் பிறவி இல்லை.

"மெய்ப்பொருளைக் கண்டு கொண்டவுடன், இதய முடிச்சு அவிழ்கிறது; எல்லா ஐயங்களும் நீங்குகின்றன; எல்லா வினைகளும் அழிகின்றன" என்று முண்டக உபநிஷத் கூறுகிறது.

## 56. எங்கும் மெய்ப்பொருள்

**திர்யக்-ஊர்த்வம்-அத:-பூர்ணம்**
**ஸத்-சித்-ஆனந்தம் அத்வயம்**
**அனந்தம் நித்யம் ஏகம் யத்**
**தத் ப்ரஹ்ம இதி அவதாரயேத்**

*யத் - எது, திர்யக் - குறுக்காகவும், ஊர்த்வம் - மேலேயும், அத:- கீழேயும் (இருக்கிறதோ), பூர்ணம் - முழுப்பொருளோ, ஸத் - உள்ள பொருளோ, சித் - அறிவோ, ஆனந்தம் - இன்பமோ, அத்வயம் - இரண்டற்றதோ, அனந்தம் - எல்லையற்றதோ, நித்யம் - என்றுமுளதோ, ஏகம் - ஒன்றோ, தத் - அதை, ப்ரஹ்மம் - மெய்ப்பொருள் என்று, அவதாரயேத் - உறுதியாக அறிக.*

குறுக்கும், மேலும், கீழும், முழுமையாய், ஸத்-சித்-ஆனந்தமாய், இரண்டற்றதாய், முடிவற்றதாய், என்றுமுளதாய், ஒன்றாய் உள்ளது எதுவோ அது மெய்ப்பொருள் என்று உறுதியாக அறிக.

மெய்ப்பொருள் இல்லாத இடமே இல்லை. உள்ளும் புறமும், வலமும் இடமும், மேலும் கீழும், முன்னும் பின்னும் எங்கும் அது நீக்கமற நிறைந்திருக்கிறது.

இறைவன் எங்கே இருக்கிறான்? என்று தந்தை கேட்ட கேள்விக்குப் பிரகலாதன், தூணிலும் உளன், துரும்பிலும்

உளன், அணுவினைச் சத கூறிட்ட கோணிலும் உளன்" என்று சொல்லி, "நீ சொன்ன சொல்லிலும் உளன்" என்முன்,

கோயிலில் சந்நிதிக்கு எதிராகக் காலை நீட்டிப் படுத் திருந்த பெரியவரைப் பார்த்து காலை மடக்கிக்கொள்ளுமாறு சொன்னார்கள். "ஐயன்மார்களே, இறைவன் இல்லாத இடமாகப் பார்த்து என் கால்களை நகர்த்தி வைத்துவிட்டுப் போங்களேன்', என்றார் அப்பெரியவர்.

## 57. பொய்மை விலக்கி மெய்மை அறிதல்

அதத்·வ்யாவ்ருத்தி ரூபேண
    வேதாந்தைர் லக்ஷ்யதே அவ்யயம்
அகண்டானந்தம் ஏகம் யத்
    தத் ப்ரஹ்ம இதி அவதாரயேத்

யத் - எது, அதத் - அதல்லாத மற்றவைகளை, வ்யாவ்ருத்தி-விலக்கு வதன், ரூபேண-மூலம், வேதாந்தை:-உபநிஷத்துக்களால், லக்ஷ்யதே- குறிப்பால் உணர்த்தப் பெறுகின்றதோ, அவ்யயம் - அழிவில்லாததோ, அகண்டம் - பிளவில்லாததோ, ஆனந்தம் - இன்பமானதோ, ஏகம் - ஒன்றோ, தத் - அதை, ப்ரஹ்ம - மெய்ப்பொருள், இதி - என்று, அவதாரயேத் - உறுதியாக அறிக.

அதல்லாதவற்றை விலக்குவதன்மூலம் வேதாந் தங்களினால் எந்த ஓர் அழிவில்லாத, இரண்டற்ற இன்பமான பொருள் குறிக்கப்பட்டிருக்கின்றதோ அதை மெய்ப்பொருள் என்று உறுதியாக அறிக.

மெய்ப்பொருளை நேராக "இத்தகையது, இப்படியது, இந்நிறத்தது,' என்று எழுதிக் காட்டவொணாது, சொல்லி விளக்க முடியாது. ஏனெனில், அது சுட்டிக் காட்டப்படக் கூடிய பொருள் அன்று. வாக்கு, மனம், காயங்களுக்கு

எட்டாதது. "எது மனத்தால் அறியப்படாததோ, எதனுல் மனம் அறிகிற ஆற்றலைப் பெற்றிருக்கின்றதோ அதை மெய்ப்பொருள் என்று அறிவாயாக!" என்று கேன உபநிஷத் கூறுகின்றது.

"தெரியாது என்று சொன்னவனுக்கு அது தெரி கின்றது; தெரிகின்றது என்று சொன்னவனுக்குத் தெரிய வில்லை" என்றும் அது கூறுகிறது.

எனவே எதிர்மறையாகத்தான் மெய்ப்பொருளைக் கூற முடியும். மெய்ப்பொருளல்லாதவற்றை விலக்கி, "இதன்று இதன்று" என்று எல்லாவற்றையும் தள்ளி, தள்ள முடியாமல் எஞ்சி நிற்பது மெய்ப்பொருள். எதை மறுத் தாலும் மெய்ப்பொருளை மறுக்க முடியாது. அது இருந் தால்தான் மற்றவற்றை மறுக்கமுடியும். (மறுப்பதற்கும் ஓர் அறிவு வேண்டும்.) அந்த அறிவே ஆத்மா.

இத்தகைய மெய்ப்பொருளைச் சொற்களால் சொல்ல முடியாது. குறிப்பாகத்தான் உணர்த்தலாம். ஒரு பெண்ணைப் பார்த்து "இவர்களுள் யாரை உன் கணவனுக வரிக்க விரும்புகிருய்! இவனு, இவனு?" என்று கேட்டுக் கொண்டே வந்தபொழுது "இல்லை, இல்லை" என்று சொல்லிக்கொண்டே வந்தாள். கடைசியில் அவள் மனதுக் குகந்த மணளனையே காட்டிக் கேட்டபொழுது அப்பெண் மௌனமாகத் தலைகுனிந்தாள். இது "ஆம்" என்பதற்குக் குறிப்பு.

ஆகவே "ந இதி ந இதி" என்று "இது இல்லை, இது இல்லை" என்று மறுத்து, மெய்ப்பொருளைக் குறிப்பாகத் தான் உணர்த்த முடியும். நேரே எழுதிக்காட்ட முடியாது. பேச்சடங்கிப் போன நிலை அது.

## 58. மெய்ப்பொருள் ஆனந்தம்

**அகண்ட-ஆனந்த-ரூபஸ்ய**
**தஸ்ய ஆனந்த-லவ-ஆச்ரிதா:**
**ப்ரஹ்மாத்யா: தாரதம்யேன**
**பவந்தி ஆனந்தினோ அகிலா:**

*அகண்ட - பிளவில்லாத, ஆனந்த - இன்ப, ரூபஸ்ய - வடிவமான, தஸ்ய - அந்த மெய்ப்பொருளினுடைய, ஆனந்த - இன்பத்தின், லவ - சிறுதுளியை, ஆச்ரிதா:- அடைந்து, ப்ரஹ்மா - பிரம்மா, ஆத்யா - முதலிய, அகிலா:- எல்லோரும், தாரதம்யேன - பல அளவுகளில், ஆனந்தின:-இன்பமுற்றவர்களாக, பவந்தி-ஆகிறார்கள்.*

குறைவுபடாத இன்ப வடிவமான அந்த (மெய்ப் பொருளினுடைய) இன்பத்தைச் சிறிது அடைந்து, படைப்புக்கடவுளான பிரம்மா முதலிய எல்லோரும் ஏறக்குறைய இன்பமுற்றவர்களாகிறார்கள்.

பிருஹதாரண்யக உபநிஷத்தில் "இந்தப் பேரானந்தத்தின் திவலையினால் மற்ற உயிரினங்களெல்லாம் வாழ்கின்றன" (IV-iii, 32) என்று கூறப்பட்டிருக்கிறது.

தங்கத்திலான நகைகளெல்லாம் தங்கத்தின் இயல்பைத்தானே கொண்டிருக்கும்? அதுபோல ஆனந்தத்தில் விளைந்தது, ஆனந்த வடிவமாகத்தான் இருக்கும். ஆனாலும் தங்கம் அழுக்கேறி ஒளி குன்றியிருப்பதுபோல, ஆனந்தமும் அறியாமையின் பயனாக மாசுகளினால் மறைக்கப் பட்டிருக்கலாம். எனினும், தெரிந்தோ தெரியாமலோ, உலகத்துச் சிற்றின்பங்கள்கூட மெய்ப்பொருள் இன்பத்தி லிருந்து தெறித்த பொருள்கள்தாம். அறிவெல்லாம் மெய்ப்பொருளறிவாகவே இருப்பதுபோல, இன்பமெல் லாம் மெய்ப்பொருளின்பமேயாகும்.

## 59. மெய்ப்பொருளில் எல்லாம் அடங்கும்

தத்-யுக்தம்-அகிலம்-வஸ்து
வ்யவஹாரஸ் சித்-அன்விதः
தஸ்மாத் ஸர்வகதம் ப்ரஹ்ம
க்ஷீரே ஸர்ப்பிः இவ அகிலே

*அகிலம் - எல்லா, வஸ்து - பொருள்களும், தத்-அதனுடன், யுக்தம்-சேர்ந்திருக்கின்றன; வ்யவஹாரः- உலகத்து நடவடிக்கைகள், சித் - அறிவுடன், அன்விதः- சேர்ந்திருக்கின்றன. தஸ்மாத் - ஆகையினால், ப்ரஹ்ம - மெய்ப்பொருள், ஸர்வ - எங்கும், கதம் -நிறைந்துள்ளது, ஸர்ப்பிः- வெண்ணெய், க்ஷீரே - பாலின், அகிலே - எல்லாப் பகுதிகளிலும் (நிறைந்திருப்பது), இவ - போல.*

**எல்லாப் பொருள்களும் அந்த (மெய்ப்பொருளோடு) கூடியனவாக இருக்கின்றன. எல்லா உலக நடைமுறைகளும் (அந்தப்) பேரறிவோடு கூடியவையாக இருக்கின்றன. இதனால், எங்கும் நிறைந்து உள்ளது மெய்ப்பொருள், பாலில் வெண்ணெயைப்போல.**

முயற்கொம்பைப்போல உலகம் முழுப் பொய்யன்று. மெய்ப்பொருளின்பேரில் அதன் தோற்றம் ஏற்பட்டிருப்பதால், அதில் அந்த மெய்ப்பொருளின் இருப்பு உண்டு. பன்மைதான் தோற்றம்; அதனுள் இருக்கும் ஒருமை என்பது உண்மை. "மரத்தை மறைத்தது மாமதயானை; மரத்தில் மறைந்தது மாமத யானை' என்பதுபோல, ஒருமையை மறைக்கின்றபோது உலகம் மாயை என்ற தீமையாகின்றது, மெய்ப்பொருளை விட்டுவிட்டு, உலகம் இருந்துவிட முடியாது; அப்பொழுது அது முழுப்பொய்யாகி விடும்.

பாலில் வெண்ணெய் எங்கும் மறைந்திருப்பது போல உலகில் உண்மை மறைந்திருக்கிறது. அறிவைக்கொண்டு,

கடைந்தெடுத்தால் அதைப் பெறலாம். கைவல்ய நவநீதம் அல்லது முக்தி வெண்ணெய் கிடைக்கும்.

கன்றுக்குத் தெரியாததால் பாலில் வெண்ணெய் இல்லை என்று கூற முடியுமா?

## 60. மெய்ப்பொருள் எப்படி இல்லை?

அனணு அஸ்த்தூலம் அஹ்ரஸ்வம்
அதீர்க்கம் அஜம் அவ்யயம்
அரூப-குண வர்ணாக்யம்
தத் ப்ரஹ்ம இதி அவதாரயேத்

*அனணு - சிறிதுமின்றி, அஸ்த்தூலம் - பருப்பொருளுமின்றி, அஹ்ரஸ்வம் - குட்டையுமின்றி, அதீர்க்கம் - நெட்டையுமின்றி, அஜம் - பிறப்பின்றி, அவ்யயம் - அழிவின்றி, ரூபம் - உருவம், குணம் - குணம், வர்ணம் - நிறம், ஆக்யம் - என்ற இவை, அ - இன்றி உள்ள, தத் - அது, ப்ரஹ்ம - மெய்ப்பொருள், இதி - என்று, அவதாரயேத் - உறுதியாக அறிக.*

சிறியதன்று, பெரியதன்று, குட்டையன்று, நெட்டையன்று, பிறப்பற்றது, அழிவற்றது, உருவம், குணம் நிறம் அற்றது என்பது எதுவோ அதை மெய்ப்பொருள் என்று உறுதியாக அறிக.

இந்த உரை பிருஹதாரண்யக உபநிஷத்தில் யாக்ஞவல்கியரால் சொல்லப்படுகிறது (III, viii, 8). இந்த முறையில் மெய்ப்பொருளைப் பற்றிக் கூறுவதைத் தான் "நஇதி நஇதி" (இதன்று, இதன்று) என்ற எதிர்மறைக் கூற்று என்று முன்னர் சொல்லப்பட்டது. எது மெய்ப்பொருள் இல்லை என்று கூறுவது எளிது. ஏனெனில் நமக்குத் தெரிந்த எல்லாப் பொருள்களும் ஏதோ ஒரு வகையில் குறையுள்ளன வாக இருக்கின்றன. இவற்றை மெய் என்று கூறமுடிவ தில்லை. இவையெல்லாம் உண்டாவதற்குக் காரணமான

ஒரு மெய்ப்பொருள் இருக்கவேண்டும். அதில் இக்குறைக ளெல்லாம் இருக்க முடியாது என்று உறுதியாகத் தெரி வதால், "உலகத்துப் பொருள் ஒன்றும் மெய்யன்று" என்று எதிர்மறையாகக் கூறுவது எளிது.

## 61. மெய்ப்பொருளின் ஒளி

யத் பாஸா பாஸதே அர்க்காதி
பாஸ்யைர் யத் து ந பாஸ்யதே
யேன ஸர்வம் இதம் பாதி
தத் ப்ரஹ்ம இதி அவதாரயேத்

*யத் - எதனுடைய, பாஸா - ஒளியினால், அர்க்க - சூரியன், ஆதி - முதலியவை, பாஸதே - ஒளிவீசுகின்றனவோ, து - ஆனால், யத் - எது, பாஸ்யை:- (தன்னால்) ஒளியூட்டப்பட்டவற்றினால், பாஸ்யதே ந- ஒளிர்விக்கப்படவில்லையோ, யேன - எதனால், இதம் - இந்த, ஸர்வம் - எல்லாம், பாதி - விளங்குகிறதோ, தத் - அதை, ப்ரஹ்ம - மெய்ப் பொருள், இதி - என்று, அவதாரயேத்- உறுதியாக அறிக.*

எதன் ஒளியால் சூரியன் முதலியவை ஒளிபெறு கின்றனவோ, ஒளி பெற்ற இவற்றால் எது ஒளிர் விக்கப் படுவதில்லையோ, எதனால் இவை யெல்லாம் தோன்றுகிறதோ அதை மெய்ப்பொருள் என்று உறுதியாக அறிக.

இந்தக் கருத்து முண்டக உபநிஷத்திலும், பகவத் கீதை யிலும் காணப்படுகின்றது.

சந்திரன் சூரியனிடமிருந்து ஒளி பெறுகின்றது. அதன் ஒளி கடன் வாங்கிய ஒளி. நட்சத்திரங்கள் தாமே ஒளி பெற்றிருக்கின்றன. ஆனால் மெய்யறிவின் ஒளி என்பது இது போன்ற பௌதிக ஒளி அன்று. ஒளியை அறியும் அறிவில்லையானால் ஒளியும் இருட்டுத்தான். எனவே மெய்ப்

பொருளின் ஒளி என்று சொல்லும் போது அறிவொளி யைத் தான் சொல்லுகின்றோம்.

காற்றடிக்கும் பொழுது புழுதியை வாரி இறைக்கிறது. இங்குக் காற்றின் தன்மை வேறு; புழுதியின் தன்மை வேறு. இருந்தும் புழுதி இறைவதும் காற்றின் வீச்சினால் அல்லவா? அது போல, அறிவொளியும் ஜட ஒளியும் வெவ்வேறு என்றாலும், அறிவொளியினால் ஜட ஒளி இயக்கப்படலாம் என்பார் சங்கரர். நெருங்கிப் பார்த்தால், ஜடமென்று ஒன்றும் தனியாகக் கிடையாது. எல்லாம் அறிவொளியின் பல தோற்றங்களே யாகும்.

சூரியனுடைய ஒளியால் வாழ்க்கை நடத்துகிறோம். சூரியன் இல்லாதபொழுது சந்திரன், அல்லது நட்சத்திரங்கள், மின்னல், நெருப்பு இவை உதவுகின்றன, இவையும் இல்லாவிட்டால் பேச்சு ஒளியாக உதவுகிறது. இருட்டில் பேச்சினால் காரியம் செய்கிறோம். அதுவும் இல்லாத பொழுதும் கனவில் எல்லாம் செய்கிறோம். எனவே மெய்ப் பொருள் ஒன்றையும் சாராத தனிப்பெரும் ஜோதி என்று பிருஹதாரண்யக உபநிஷத் கூறும்.

## 62. மெய்ப்பொருளின் தன்னொளி

**ஸ்வயம் அந்தர்-பஹிர்-வ்யாப்ய**
**பாஸயன் அகிலம் ஜகத்**
**ப்ரஹ்ம ப்ரகாசதே வஹ்னி-**
**ப்ரதப்த-அயஸ-பிண்டவத்**

*ஸ்வயம் - தான், அந்தர் - உள்ளேயும், பஹி:ச - வெளியேயும், வ்யாப்ய - பரந்து, அகிலம் - எல்லா, ஜகத் - உலகத்தையும், பாஸயன் - விளங்கச் செய்து கொண்டு, ப்ரஹ்ம - மெய்ப்பொருள், ப்ரகாசதே - விளங்குகிறது, வஹ்னி - நெருப்பினால், ப்ரதப்த - நன்றாகக் காய்ச்சப் பட்ட, அயஸ - இரும்பு, பிண்ட - குண்டை, இவ - போல.*

உள்ளும் புறமுமாக உலகமனைத்தையும் தான் நிறைந்து ஒளிர்வித்து, மெய்ப்பொருள் விளங்குகின்றது, நெருப்பினால் பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்புக் குண்டைப் போல.

பழுக்கக் காய்ச்சிய இரும்புக் குண்டு எரிக்கும் தன்மையுடையது. அந்த இரும்புக் குண்டு சுடும் என்று சொல்லுகிறோம். ஆனால் உண்மையில் சுடுவது இரும்புக் குண்டன்று: நெருப்புத்தான். இரண்டும் இரண்டறக் கலந்து விட்டபடியால், ஒன்றின் இயல்பு மற்றொன்றினுடையதாகத் தெரிகிறது. இரும்பு சுடுவதாகத் காண்கிறது; நெருப்புக்கு உருவம் வந்து விட்டதாகக் காண்கிறது.

இதுபோல, உலகம் முழுதும் மெய்ப்பொருள் நிறைந்து இருப்பதால், மெய்ப் பொருளியல்புகள் எல்லாம் உலகத்திற்கு இருப்பதாகத் தோன்றுகிறது. மாறாக, உலகத்தின் வடிவங்கள் மெய்ப்பொருளுக்கு ஏற்பட்டு விட்டதாகத் தோன்றுகிறது. இப்படி மெய்யும் பொய்யும் கலந்த தோற்றம் இவ்வுலகம். எனவே, ஸத்-சித்-ஆனந்தம் என்ற இயல்புகளெல்லாம் மெய்ப்பொருளுக்கே யன்றி உலகத்திற்கு அன்று என்று தெளியவேண்டும்.

## 63. மெய்ப்பொருளைத் தவிர எல்லாம் பொய்

ஜகத்-விலக்ஷணம் ப்ரஹ்ம
ப்ரஹ்மணோ அன்யத் ந கிஞ்சன
ப்ரஹ்ம-அன்யத் பாதி சேத்
மித்யா யதா மரு மரீசிகா

ப்ரஹ்ம-மெய்ப்பொருள், ஜகத்-உலகத்திற்கு, விலக்ஷணம்- மாறான இயற்கையுடையது. ப்ரஹ்மணா:- மெய்ப்பொருளை, அன்ய- தவிரவேறு,

*கிஞ்சன - ஒன்றும், ந - இல்லை. ப்ரஹ்ம - மெய்ப்பொருளைத் தவிர, அன்யத்- வேருக,பாதி விளங்குகின்றது, சேத் - என்ருல், மித்யா - அது பொய்யாகும், யதா - எப்படி, மருமரீசிகா - கானல் நீர், (பொய்யோ) அது போல.*

**உலகைவிட வேருன இயல்புடையது மெய்ப் பொருள். மெய்ப்பொருளைத் தவிர வேருென்றும் இல்லை. மெய்ப்பொருளைத் தவிர வேருக (உலகம்) தோன்றினுல், அது வெறும் பொய்த் தோற்றம் (மித்யை) ஆகும், பாலைவனத்தில் கானல் நீர் போல.**

மெய்ப் பொருளின் இயல்பு **ஸத்-சித்-அனந்தம்-ஆனந்தம்** என்ருல், உலகின் இயல்பு அதற்கு நேர் முரணுக இருக்கிறது. **அஸத்-அசித்-அந்தம்-துக்கம்** என்று அது அமைந் திருக்கிறது.

மெய்ப்பொருள் ஒன்றுதான் உள்ளது. அதில் வேற் றுமைகள் இல்லை. அதைத் தவிர உலகம் என்று தனித்து இருப்பதாகத் தோன்றினுல் அது பொய்த் தோற்றமாகத் தான் இருக்கும்.

பாலைவனத்தில் கானல் நீர் தெரிகிறது. மணலையும் சூட்டையும் தவிர நீர் தனியாகக் கிடையாது. அப்படி இருப்பதாகத் தோன்றுவதால்தான் பேய்த்தேர், கானல் நீர் என்று அது சொல்லப்படுகிறது.

## 64. புலனுவதெல்லாம் மெய்ப்பொருள்

**த்ருச்யதே ச்ரூயதே யத் யத்**
**ப்ரஹ்மணோ அன்யத் ந தத் பவேத்**
**தத்வ-ஞானுத் ச தத் ப்ரஹ்ம**
**ஸத்-சித்- ஆனந்தம் அத்வயம்**

*யத்யத்-எதெது, த்ருச்யதே-பார்க்கப்படுகிறதோ, ச்ரூயதே-கேட்கப் படுகிறதோ, தத் - அது, ப்ரஹ்மண:- மெய்ப்பொருளைத் தவிர, அன்யத்-*

றவறு, ந பவேத் - ஆகாது. ச-மேலும், தத்வ ஞானத் - மெய்யறிவினால், தத் - அந்த, ப்ரஹ்ம - மெய்ப்பொருள், ஸத் - ஸத்தாகவும், சித்-அறிவாகவும், ஆனந்தம் - இன்பமாகவும், அத்வயம் - இரண்டற்றதாகவும், உணரப்படுகின்றது.

பார்க்கப் படுவதும் கேட்கப்படுவதுமான எல்லாம், மெய்ப்பொருளைவிட வேறன்று. உள்ளது என்றும் அறிவு என்றும் இன்பம் என்றும் அந்த மெய்ப்பொருள் மெய்யறிவின் மூலம் உணரப்படுகிறது.

உற்றுச் சிந்தித்தால் பார்க்கப்படுகின்ற, கேட்கப்படுகின்ற பொருள் எல்லாம் மெய்ப்பொருளின் தோற்றமாதலால் அதைவிட அவை வேறன்று என்பது தெளிவாகும். கிளிஞ்சலை வெள்ளி என்று பார்க்கிறோம், இது தவறான பார்வையாகும். உண்மையில் நாம் பார்ப்பதென்னவோ கிளிஞ்சல்தான். கிளிஞ்சலுடன் நமது கண்ணுக்குத் தொடர்பு இருக்கிறது. அது போல, நாம் பார்க்கும் பொருளனைத்தும் மெய்ப் பொருளின் வடிவமே யாதலால், காட்சிக்குப் புலனாவதும் மெய்ப்பொருளே யாகும்.

## 65. அறியாமைக் கண்கொண்டு மெய்ப்பொருளைக் காணமுடியாது

ஸர்வகம் ஸத்-சித்-ஆத்மானம்
ஞான சக்ஷுர்-நிரீக்ஷதே
அஞ்ஞான-சக்ஷுர் ந ஈக்ஷேத
பாஸ்வந்தம் பாநும் அந்தவத்

ஸர்வகம் - எங்கும் நிறைந்ததும், ஸத் - ஸத்தாகவும், சித் - அறிவாகவும் உள்ள, ஆத்மானம் - மெய்ப்பொருளை, ஞானசக்ஷு:-மெய்க்கண் கொண்டு, நிரீக்ஷதே ஒருவன் - பார்க்கிறான். அஞ்ஞானசக்ஷு:- பொய்க்கண்கொண்டு, ந ஈக்ஷேத-(ஒருவன்) பார்க்கமுடியாது, அந்த -

குருடன், பாஸ்வந்தம் - ஒளிவீசுகின்ற, பானும்-சூரியனை, வத் (காணமுடியாதது) போல.

> மெய்யறிவைக் கண்ணாகக் கொண்டவன் எங்கும் நிறைந்ததும், ஸத்-சித்-வடிவமானதுமான மெய்ப்பொருளைக் காண்கிறான். பொய்யறிவைக் கண்ணாகக் கொண்டவன் காண்பதில்லை, ஒளி வீசுகின்ற சூரியனைக் குருடன் (காணாதது போல).

எங்கும் எதிலும் மெய்ப்பொருளே உண்மையானால், ஏன் அது எல்லோருக்கும் தெரியவில்லை என்ற கேள்வி எழக்கூடும். உண்மையாக இருக்கும் ஒன்று எல்லோருக்கும் தெரிந்து விடும் என்ற கட்டாயமில்லை. எல்லாருக்கும் உண்மை தானே விளங்கி விடுவதாக இருந்தால் இதற்கென்று பள்ளிக்கூடங்களும், கல்லூரிகளும், ஆராய்ச்சி சாலைகளும் தேவையில்லை. புத்தகங்களும் ஆசிரியர்களும் தேவையில்லை.

"ஒரு கிண்ணத்தில் நீர் கொண்டுவா!" என்றார் உத்தாலகர் தனது மகன் சுவேதகேதுவைப் பார்த்து, "அதில் சிறிது உப்பைப்போடு" என்றார். உப்பு தண்ணீரோடு கலந்தது. "நீரில் உப்பு எங்கிருக்கிறது" என்று கேட்டுவிட்டுச் சொல்வார்: "குழந்தாய்! கண்ணுக்குத் தெரியாமல் இந்த நீரிலே எங்கும் நிறைந்திருக்கும் உப்பைப் போல, மெய்ப்பொருள் கண்ணுக்குத் தெரியாமல் எங்கும் நிறைந்திருக்கிறது."

சூரியன் கிழக்கே உதித்து மேற்கே மறைகிறான் என்று தான் எல்லோரும் நினைத்தார்கள். நகருவது சூரியனன்று, பூமிதான் என்று தெரிவதற்குப் பல நூறு ஆண்டுகளாயின. உலகம் உருண்டை என்று சிரமப்பட்டுத் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கின்றது. ரத்த ஓட்டம்,

மூளையின் தொழில், இதயத்தின் இயக்கம், நோய்களின் காரணங்கள் இவற்றை யெல்லாம் மனிதன் உழைத்து உழைத்துத்தான் அறிய முயன்றிருக்கிறான். எனவே உண்மை எப்பொழுதும் எல்லோருக்கும் உடனே தெளி வாகிவிடும் என்று எதிர்பார்ப்பது முறையாகாது.

இவ்வாறே, மெய்யறிவையும் ஆழ்ந்து ஆராய்ந்துதான் பெறமுடியும். சூரியன் இருப்பது குருடனுக்குத் தெரிவ தில்லை. மெய்ப்பொருளை அறியாத நாம், கண்ணிருந்தும் குருடர்களாயிருக்கிறோம். கண்ணன் அர்ஜுனனுக்கு ஞானக் கண்ணைத் தந்து உண்மையைக் காண்பித்தான்.

மெய்யறிவு பெற்றவர்களுக்கு உண்மை பட்டப் பகலாகத் தெரிகிறது. பொய்யறிவில் உழல்கின்றவர்களுக்கு உண்மை ஓரே இருட்டாயிருக்கிறது என்று பகவத் கீதை கூறும். "தங்கமயமான தகட்டினால் உண்மையின் முகம் மறைக்கப்பட்டிருக்கின்றது. நான் அதைப் பார்க்கும்படி தகட்டை நீக்கி அருளுவாயாக!" என்று பக்தன் வேண்டுவ தாக ஈசாவாஸ்ய உபநிஷத் தனது பதினைந்தாவது மந்த்ரத்தில் கூறுகின்றது. "எழுந்திருங்கள்! விழித்துக் கொள்ளுங்கள்! சற்குருவை நாடி அறிவு பெறுங்கள்!" என்று முண்டக உபநிஷத் அழைக்கிறது.

நம்முடைய வாழ்க்கை பெரும்பாலும் உண்மையறியாத ஒரு தூக்கம் என்றார் கௌடபாதர் என்னும் அத்வைத ஆசிரியர். மாயைக்கு மஹாஸுஷுப்தி அல்லது பெருந்தூக்கம் என்ற பெயரிட்டு அழைக்கிறார் சங்கரர். இத்தூக்கத்தில் மொத்தமாக அறியாமைதான் ஆட்சி செலுத்தும். "இருட்டைத் தாண்டிச் சூரிய வண்ணமான உண்மையை அறிந்தவன் வித்வான்; அவன் இந்த உலகிலேயே இறவாமையை அடைகிறான்" என்று ச்வேதாச்வதர உபநிஷத் கூறுகின்றது.

## 66. ஞானத்தீயில் பொசுங்கிய பொய்கள்

ச்ரவணாதிபி: உத்தீப்த
ஞானாக்னி - பரிதாபித:
ஜீவ: ஸர்வ மலாத் முக்த:
ஸ்வர்ணவத் த்யோததே ஸ்வயம்

*ச்ரவண - வேதாந்த வாக்கியங்களைக் கேட்டுப் பொருளுணர்வது, ஆதிபி:- முதலிய முறைகளால், உத்தீப்த - தூண்டப்பட்ட, ஞான- மெய்யறிவு என்னும், அக்னி - நெருப்பினால், பரிதாபித:- கொளுத்தப் பட்டு ஜீவ:- உயிர், ஸர்வ-எல்லா, மலாத் - மாசுகளினின்றும், முக்த:- விடுபட்டவனாய், ஸ்வயம் - தான், ஸ்வர்ண - தங்கத்தை, வத் - போல, த்யோததே - விளங்குகிறான்.*

ச்ரவணம் முதலியவற்றால் வளர்க்கப்பட்ட மெய்யறிவு என்னும் தீயினால் எங்கும் காய்ச்சப் பட்டு உயிர் எல்லா மலங்களிலிருந்தும் விடுபட்டு (புடம் போட்ட) தங்கம் போல ஒளி வீசுகின்றது.

வேதாந்த வாக்கியங்களை, சிறப்பாக, மஹா வாக்கியங் களைக் குருவினிடமிருந்து கேட்டு அவற்றின் கருத்து இரண்டற்ற மெய்ப்பொருள் என்று தெளிவது ச்ரவணம் (கேள்வி) எனப்படும். இதை நன்கு மனத்தில் ஆராய்ந்து ஐயங்களை நீக்கிக்கொள்ளுதல் மனனம் (சிந்தனை) எனப்படும். "நான் மெய்ப்பொருள்" (என்ற இந்தத் தெளிந்த உண்மையினை இடையறாது நினைந்திருத்தல் நிதித்யாஸனம் எனப்படும். இதனால் மெய்க்காட்சி பெறலாம்.)

தங்கத்தில் மாசு படிந்திருந்தால் தீயில் புடம் போட்டு எடுக்கவேண்டும். அப்பொழுது, அது மாசு நீங்கிப் பிரகாசிக்கும். அதுபோல, அறியாமை என்ற மாசு நீங்க நம்மை ஞானத்தீயில் புடம் போட்டு எடுக்கவேண்டும். சீதை மாசற்ற கற்புக்கரசி என்று தெரிந்தும் அக்கினிப் பிரவேசம் செய்து தன் பெருமையை உலகிற்கு உணர்த்தினாள் அல்லவா?)

## 67. இதய வெளியில் தோன்றும் மெய்ப் பொருள்

ஹ்ருத் ஆகாச-உதித: ஹி ஆத்மா
போதபாநு: தம-அபஹ்ருத்
ஸர்வவ்யாபீ ஸர்வ தாரீ
பாதி பாஸயதே அகிலம்

*ஹ்ருத் – இதயம் என்னும், ஆகாச – ஆகாயத்தில், உதித:- எழுந்த, போத - அறிவு, பாநு – சூரியனான, ஆத்மா – மெய்ப்பொருள், தம:- அறியாமை இருட்டை, ஹ்ருத் - அழிக்கின்றது. ஸர்வ – எல்லாவற்றையும், வ்யாபீ- ஊடுநவி நிற்கிறது. ஸர்வ - எல்லாவற்றையும், தாரீ – தாங்குகிறது. பாதி – விளங்குகின்றது. அகிலம் – எல்லாவற்றையும், பாஸயதே – விளங்கச் செய்கிறது.*

**இதய வெளியில் உதிக்கும் அறிவுச் சூரியனான ஆத்மா (அறியாமை) இருட்டை அழிக்கிறது. எங்கும் நிறைந்து எல்லாவற்றிற்கும் ஆதாரமாகி எல்லாவற்றையும் விளக்குகிறது; விளங்கவும் செய் கிறது.**

இதய வெள்ளியில்தான் மெய்ப்பொருள் சிறப்பாக விளங்குகிறது. இதில் இறைவன் இருக்கிறான் என்பதால் இது இதயம் எனப்படுகிறது. உடலைத் தனது பட்டணமாகக் கொண்டு இதயத் தாமரையைத் தனது அரண்மனையாகக் கொண்டு மெய்ப்பொருள் விளங்குகிறது. இது தஹரா காசம் எனப்படும். இதில் இறைவனை உபாஸனை செய்ய வேண்டும் என்று சாந்தோக்ய உபநிஷத் சொல்லுகின்றது.

"அர்ஜுனா! இறைவன் உயிர்களின் இதயப் பிரதேசத்தில் நிற்கிறான்" என்று கீதையில் கண்ணன் சொல்லுகிறான். "எல்லா உலகிற்கும் அரசன் என்றால், அயோத்திக்கும் அரசன் என்றுதானே ஆகும்? அதுபோல

எங்குமுள்ள இறைவன் இதயத்தினுள் இருக்கிறான்" என்றார் சங்கரர்.

## 68. மெய்ப்பொருள் என்னும் நீராடுதுறை

திக்-தேச-காலாதி அனபேக்ஷ்ய ஸர்வகம்
சீதாதி -ஹ்ருத்-நித்ய-ஸுகம் நிரஞ்ஜனம்
யஸ் ஸ்வாத்ம தீர்த்தம் பஜதே விநிஷ்க்ரிய:
ஸ: ஸர்வவித் ஸர்வகத: அம்ருதோ பவேத்

*திக்-திக்குகள், தேச-இடங்கள், கால-நேரங்கள், ஆதி-முதலியவற்றை, அனபேக்ஷ்ய-பாராமல், விநிஷ்க்ரிய:-செயல்களைத் துறந்து, ய:-எவன், ஸர்வ-எல்லாவற்றிலும், கம்-நிறைந்து, நிற்பதும், சீத-குளிர், ஆதி-முதலியவற்றை, ஹ்ருத்-அழிப்பதும், நித்ய-என்றும், ஸுகம்-இன்பமளிப்பதும், நிரஞ்ஜனம்-மாசற்றதுமான, ஆத்ம-மெய்ப்பொருள் என்னும், தீர்த்தம்-புண்ணிய நீர்த்துறையை, பஜதே-நாடுகிறானோ, ஸ:-அவன், ஸர்வ-எல்லாவற்றையும், வித்-அறிந்தவனாகவும், ஸர்வ-எங்கும், கத:-நிறைந்தவனாகவும், அம்ருத:-மரணமற்றவனாகவும், பவேத்-ஆகிறான்.*

இடம், நேரம் முதலியவற்றைக் கவனியாமல் எங்கும் நிறைந்திருப்பதும், குளிர்ச்சி முதலியவற்றை நீக்குவதும், என்றும் இன்பமாயிருப்பதும், குற்றமில்லாததுமான மெய்ப்பொருள் என்னும் புண்ணிய நதியை வேறொரு காரியமுமில்லாமல் எவன் நாடுகிறானோ (நீராடுகிறானோ) அவன் முற்றுமுணர்ந்தவனாகவும், எங்கும் நிறைந்தவனாகவும் மரணமில்லாதவனாகவும் ஆகிறான்.

காசி, ராமேசுவரம் முதலிய புண்ணியத் துறைகளாடுவதற்குக் குறித்த இடங்களும், நேரங்களும் உண்டு. நல்ல குளிர்காலத்தில் நீராடினால் ஜலதோஷம் முதலியவை ஏற்படக் காரணமுண்டு. கண்ட இடத்தில் நீராடினால் முதலை பிடித்துக் கொள்ளும்; அல்லது ஆற்று வெள்ளம்

அடித்துக் கொண்டு போய்விடும். ஆனால் மெய்ப்பொருள் என்னும் நீராடு துறையோ, இடம் நேரமில்லாமல் எப்பொழுதும் குளிக்க ஏற்றது. நம்முள்ளேயே இது இருப்பதால் நெடுந்தூரம் பயணம் செய்வதனால் உண்டாகும் களைப்பும் செலவும் இல்லை. இதில் ஜலதோஷம் முதலிய நோய்கள் ஏற்படாது. மாறாக, நோய்களெல்லாம் அகலும். இது இதயதாபத்தைத் தணிக்கும்.

எங்கும் எதிலும் இடையறாது வற்றாமல் பாய்ந்து கொண்டிருக்கும் ஜீவநதி இது. கோடையில் குளிர்ச்சியாகவும், குளிர்காலத்தில் சூடாகவும், என்றும் இன்பத்தைத் தரும். இதன் நீரில் அழுக்கு கிடையாது. எல்லா அழுக்குகளும் இதில் கரையும். இதில் நீராட படிக்கட்டில் இறங்கி முழுகி முழுகி எழுந்திருக்க வேண்டாம். சும்மா இருந்தாலே போதும். எல்லையில்லாத இன்பமும் மங்களமும் உண்டாகும்.

ஓம்

ஓம்

# ஆத்ம போதத்தில் வரும் உவமைகள்

* சமையலுக்கு நெருப்பு போல 2
ஒளி இருட்கூட்டத்தை அழிப்பது போல 3
மேகங்கள் விலகியவுடன் விளங்கும் சூரியனைப் போல 4
கதகப்பொடி தண்ணீரைத் தெளிய வைப்பது போல 5
வாழ்க்கை கனவைப் போன்றது 6
கிளிஞ்சலில் தெரியும் வெள்ளிபோல 7
தண்ணீரில் எழும் குமிழிகள் போல 8
தங்கத்தில் தோன்றும் நகைகள் போல 9
ஆகாயம் போல 10
நீரில் சுவை, நிறம் முதலியவற்றைக் காண்பது போல 11
படிகக்கல் பக்கத்திலிருக்கும் நீல ஆடையினால் நீலமாகத் தெரிவது போல 15
உமியை நீக்கி அரிசியை எடுப்பது போல 16
தெளிந்த கண்ணாடியில் தெரியும் பிரதிபிம்பம் போல 17
எல்லாவற்றையும் சாக்ஷியாகப் பார்த்துக் கொண்டிருக்கும் அரசனைப் போல 18
மேகங்கள் ஓடும்பொழுது தான் ஓடுவதாகக் காணும் சந்திரனைப் போல 19
சூரிய ஒளி வந்தவுடன் வேலைகளைச் செய்யத் தொடங்கும் ஜனங்களைப் போல 20
நிறமற்ற ஆகாயத்தில் நீலநிறத்தைக் காண்பது போல 21
நீர் அசையும் பொழுது அதில் பிரதிபலிக்கும் வானத்துச் சந்திரனும் அசைகிறான் என்று எண்ணுவது போல 22

* எண்கள் செய்யுள்களைக் குறிக்கும்.

உருவகங்கள்:

மெய்யுணர்வுத் தீ அறியாமை விறகை எரிக்கிறது 42
இதய வெளியில் உதித்து அறியாமை இருளை அகற்றும் ஞான சூரியன் 67
ஆத்மா எனும் புண்ணியத் துறை 68

## பயிற்சி வினாக்கள்

ஆத்ம போதம் பயிலுவதற்கு வேண்டிய தகுதிகள் யாவை?

முக்திக்கு நேர்வழி எது?

கர்மம் ஏன் அவித்யையைப் போக்காது? எது போக்கும்? உவமை தருக.

மெய்ப்பொருள் தோன்றுவதற்கு அதை மறைக்கும் அறியாமை மட்டும் அகன்றால் போதுமா? விளக்குக.

மெய்யறிவு என்னும் ஸாக்ஷாத்காரம் எப்படி செயல்படுகிறது? உவமை காட்டி விளக்குக.

பொய்யான வாழ்க்கை எப்படி உண்மைபோல் தோன்றுகிறது?

பொய்யறிவு ஓர் அதிஷ்டானம் இன்றித் தோன்ற முடியுமா? உவமை காட்டி விளக்குக.

அப்படியானால், உலகத் தோற்றத்திற்கு அதிஷ்டானம் எது?

உபாதான காரணம் என்றால் என்ன?

நிமித்த காரணம் என்றால் என்ன?

உலகங்கள் மெய்ப்பொருளில் நீர்க் குமிழிகள் போலத் தோன்றுகின்றன என்பதையும் தங்கத்தில் நகைபோல் தோன்றுகின்றன என்பதையும் விளக்குக.

உபாதி என்றால் என்ன? உவமையால் விளக்குக. ஆத்மாவுக்கு உபாதி எது?

உபாதி எப்படி வேற்றுமைகளைத் தோற்றுவிக்கக் கூடும்? உவமை தருக.

ஆத்மாவின் ஜாதி, ஆச்ரம வேற்றுமைகள் உண்டா?

ஸ்தூல சரீரம், ஸூக்ஷ்ம சரீரம், காரண சரீரம் இவற்றை விளக்குக.

பஞ்சீகரணம் என்ருல் என்ன?

அபிமானிடம் என்ருல் என்ன? உவமையால் விளக்குக:

பஞ்சகோசங்கள் யாவை? அவற்றில் ஆத்மா எப்படி உடன் உறைகின்றது? உவமையால் விளக்குக.

எங்கும் நிறைந்த ஆத்மா ஏன் எல்லாவற்றிலும் தெரியவில்லை? உவமையால் விளக்குக.

ஸாக்ஷி என்ருல் என்ன? ஆத்மா எப்படி ஸாக்ஷியாகும்? உவமையால் விளக்குக.

செயலில்லாத மெய்ப்பொருள் செயல்படுவதாகத் தோன்றுவது எவ்வாறு? உவமையால் விளக்குக.

ராகம், த்வேஷம் எல்லாம் புத்தியினுடைய குணங்கள் தான்; ஆத்மாவினுடையது அல்ல. விளக்குக.

மெய்ப் பொருளின் இயல்புகளை விளக்குக.

"அறிகிறேன்" என்று சொல்வதன் பொருள் யாது?

"நேதி நேதி" என்பதை விளக்குக.

மஹாவாக்யங்கள் யாவை? விளக்குக.

மஹாவாக்யங்களினுல் மெய்யறிவு பெறுவது எப்படி?

ஜஹல்லக்ஷணை, அஜஹல்லக்ஷணை, ஜஹத் அஜஹல்லக்ஷணை என்பனவற்றை விளக்குக.

மாயையின் சக்திகள் யாவை?

ச்ரவணம், மனனம், நிதித்யாஸனம் என்பனவற்றை விளக்குக.

தியானம் செய்யும் முறையை விளக்குக.

த்ரிபுடீ என்ருல் என்ன?

அவகதிஜ்வாலா, அகண்டாகாரவ்ருத்தி, ஸாக்ஷாத்காரம் என்பனவற்றை விளக்குக.

வ்ருத்தி—ஞானம் என்ருல் என்ன?

ஸ்வரூப—ஞானம் என்ருல் என்ன?

ஜீவன் என்பது யாது?

உடலை விட்டுச் சென்று பிறப்படைவது எது?

கர்த்தா, கரணம், கார்யம் என்பனவற்றை விளக்குக.

ஸாதன சதுஷ்ட்டயம் என்றால் என்ன?

ஷட்சம்பத்தி என்றால் என்ன?

ஞானயோகம், விசாரயோகம் என்றால் என்ன?

என்றுமே நாம் ஆத்மாவாக இருக்க அது புதிதாக ஏதோ வந்தது போல் தெரிவது எப்படி? உவமை தருக.

கழுத்து நகை, திருடரால் வளர்க்கப்பட்ட அரச குமாரன், ஆட்டுமந்தையில் வளர்ந்த சிங்கம், இந்த உவமைகளை விளக்குக.

தசம: த்வம் அஸி: "நீ பத்தாவது மனிதன்". இதை விளக்குக.

தத்-த்வம்-அஸி வாக்கியத்தை விளக்குக.

"புழு குளவியாக மாறுகிறது" இந்த உவமையை விளக்குக.

ஸ்ரீராமனோடு ஆத்மாராமனை ஒப்பிடுக.

பரப் ஹ என்பதன் இயல்பினைக் கூறுக.

அதத்-வ்யாவ்ருத்தி என்றால் என்ன?

ஸ்வரூப லக்ஷணம் என்றால் என்ன?

தடஸ்த்த லக்ஷணம் என்றால் என்ன?

ஈசுவர தத்துவம் என்பது எது?

பரிணாமம் என்றால் என்ன?

விவர்த்தம் என்றால் என்ன?

"பழுக்கக் காய்ச்சிய இரும்புத் துண்டைப் போல" என்ற உவமையினை விளக்குக.

"கானல் நீர்போல்" என்ற உவமையினை விளக்குக.

ஆத்ம தீர்த்தம் என்றதனை விளக்குக.

ஜீவர்கள் உபாதியினால் பல பல; ஆத்மா ஒன்று என்பதை உவமையினால் விளக்குக.

அவச்சேத வாதம் என்றால் என்ன?

பிம்ப பிரதிபிம்பவாதம் என்றால் என்ன?

ஜீவன் முக்தி என்றால் என்ன?

விதேக முக்தி என்றால் என்ன?

---

ஸ்ரீ சங்கரர் எல்லோருக்கும் எளிதில் கைவரவேண்டும் என்ற கருணையினால் ஆத்மபோதம் என்ற இந்நூலை அருளினார்கள். தன்னைத்தானறிந்து துன்பத்திலிருந்து மீண்டு நாம் உய்ய வேண்டுமென்பதற்காக ஆழமான வேதாந்தக் கருத்துக்களை உள்ளங்கை நெல்லிக்கனியாகக் கொடுத்தார்கள். தமிழ்கூறும் நன்மக்கள் யாவரும் இந்த மெய்யறிவின் சுவையை உணர்ந்து இன்புறவேண்டும் என்ற தூய எண்ணத்தில் விளைந்தது இந்த நூலின் தமிழ் வடிவம்.

Gnanodaya Press, Madras - 600 001